# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்



ஜூலை—1983 ஆடி




கோனேரிராஜபுரம் நடராஜர் திருவுருவம்

# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

(மாதப் பத்திரிகை)

இந்தப் பத்திரிகைக்கு ஏஜெண்டுகள் நியமிக்கப்படாத ஊர்களுக்கு ஏஜெண்டுகள் தேவை. முன்பணம் கட்டக்கூடிய பத்திரிகை விற்பனையாளர்கள் தொடர்பு கொள்ளவும்.

**சந்தா விவரம்**

| | |
|---|---|
| வருட சந்தா | ரூ. 15 |
| ஆயுள் சந்தா | ரூ. 180 |
| தனிப் பிரதி | ரூ. 1-50 |

ஆயுள் சந்தாவை மொத்தமாகவோ, பகுதி பகுதியாகவோ, மாதம் ரூ. 15 ஆகவோ ஒரு வருடத்திற்குள் செலுத்தலாம்.

வருட சந்தாதாரர்களை ஆயுள் சந்தாதாரர்களாகப் பதிவு செய்து கொள்வதன் மூலம் பத்திரிகையின் வளர்ச்சிக்கு உதவி புரியக் கோருகிறோம். ஆயுள் சந்தா என்பது 35 ஆண்டுகளுக்குப் பத்திரிகை அனுப்பப்படும் என்பதை குறிக்கிறது.

வேண்டுகோள

1. மக்களுக்கு உணவு உடை வழங்கி உடல் சம்பந்தமான தேவைகளைப் பூர்த்தி செய்வது மிகவும் நல்ல உதவி ஆகிறது. கல்வி, தொழில் முதலியவற்றைக் கற்பித்து ஜீவனோபாயத்திற்கு வழிவகுத்துத் தருவது அதனினும் மேலான சேவை ஆகிறது. ஆன்மிக சம்பந்தமான நூல்களைப் படித்தும் கேட்டும் ஆத்மசாதனங்களில் ஈடுபடச் செய்வது தலையாய கைங்கரியமாகிறது. தானங்களிலேயே மிகச் சிறந்த தானம் ஞானதானம் என்பது ஆன்றோர் கண்ட உண்மை.

வாசக அன்பர்கள் தங்களின் சந்தாவைச் செலுத்துவதுடன், மேலும் தமது நண்பர்கள் சிலரையும் சந்தாதாரர்களாகச் சேர்த்துத் தருவது ஒரு நல்ல தொண்டாகும். இந்தப் புனித மதத் தொண்டில் சிரத்தையுடன் ஈடுபடுவது நமக்கும் மற்றவர்களுக்கும் பெருநலன் தரும்.

2. அன்பர்கள் தங்களின் தெய்விகக் கைங்கரியமாக கல்வி ஸ்தாபனங்கள், சத்சங்கங்கள் முதலியவைகளுக்குப் பத்திரிகை போய்க்கொண்டிருக்கும்படி செய்யலாம். இது ஒவ்வொரு மாதமும் தாங்கள் அளிக்கும் மேலான நன்கொடையாகவும், தங்களை ஞாபகப்படுத்தும் சிறந்த வெகுமதியாகவும் அமையும்.

3. அன்பர்கள் தங்களால் இயன்ற ஒரு சிறிதளவிற்காகிலும் புதிய சந்தாதாரர்களைச் சேர்த்துத் தரும் விஷயத்தில் முயற்சி செய்வார்கள் என்று நம்புகிறோம். குறைந்தது மூன்று சந்தாதாரர்களையாவது சேர்த்துத் தருவது மிகப் பெரிய உபகாரமாக இருக்கும். இதன் மூலம் இன்றைய சமுதாயத்தின் சூழ்நிலையில் நல்ல கருத்துகள் வளர அரும்பெரும் தொண்டு செய்தவர்களாகிறீர்கள்.

4. புதிய சந்தாதாரர்கள் பணம் அனுப்பி வைக்கும்போது புதிய சந்தா என்று குறிப்பிட்டு எழுதும்படி கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள். பழைய சந்தாதாரர்கள் தமது கடிதப் போக்குவரத்துகள் எல்லாவற்றிலும் சந்தா எண்ணையும் முழு விலாசத்தையும் அவசியம் குறிப்பிட்டு எழுத வேண்டுகிறோம்.

தொலைபேசி :
71231



விவரங்களுக்கு :
ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம் காரியாலயம்
ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்
மயிலாப்பூர் : சென்னை-600 004

ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்

தொகுதி 63 | ஜூலை—1983 ருதிரோத்காரி ஆடி மீ | இதழ் 7

பொருளடக்கம்

# ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை-600 004

## 1983 ஜுலை & ஆகஸ்ட் மாத நிகழ்ச்சிகள்

24—7—83 ஞாயிற்றுக்கிழமை குருபூர்ணிமா

7—8—83 ஞாயிற்றுக்கிழமை **சுவாமி ராமகிருஷ்ணானந்த ஜயந்தி**
காலை 5 மணி முதல் பகல் 11 மணி வரை விசேஷ பூஜை, பஜனை, ஹோமம் ஆகியவை நடைபெறும். மாலை வழிபாட்டிற்குப் பிறகு இரவு 7 மணிக்கு 'சுவாமி ராமகிருஷ்ணானந்தர் வாழ்வும் வாக்கும்' பற்றிய சொற்பொழிவுகள்.

14—8—83 ஞாயிற்றுக்கிழமை சுவாமி ராமகிருஷ்ணானந்த ஜயந்தி பொதுக்கூட்டம்
மாலை 5-30 மணிக்கு தலைவர்: சுவாமி பீதாம்பரானந்தர்
பேசுபவர்: சுவாமி கமலாத்மானந்தர்

23—8—83 செவ்வாய் சுவாமி நிரஞ்ஜனானந்த ஜயந்தி

31—8—83 புதன் ஸ்ரீகிருஷ்ண ஜயந்தி (மாலை வழிபாட்டிற்குப் பிறகு பூஜை)

ஜுலை 6, 20 & ஆகஸ்ட் 5, 19 ஆகிய ஏகாதசி தினங்களில் மாலை வழிபாட்டிற்குப் பிறகு ஸ்ரீராமநாம சங்கீர்த்தனம் நடைபெறும்.

மடத்தில் வழக்கமாக நடைபெறும் சத்சங்கம், வார நாட்களில் நடைபெறும் சொற்பொழிவுகள், வேறு சில நிகழ்ச்சிகள் போன்ற சொற்பொழிவுகள் அனைத்தும் ஜுலை & ஆகஸ்ட் மாதங்களிலும் எப்போதும்போல் நடைபெறும்.





# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்


ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமன் இல்லை. —திருமூலர்

## பிரார்த்தனை

त्वमेव कारणं कार्यं क्रिया ज्ञानं त्वमेव च ।
त्वामम्ब न विना किञ्चित् त्वयि सर्वं प्रतिष्ठितम् ॥
भवानि तव पादाब्जनिर्णेजनपवित्रिताः ।
भवामयप्रशान्त्यै त्वामपो याचामि भेषजम् ॥

த்மேவ காரணம் கார்யம் க்ரியா ஜ்ஞாநம் த்வமேவ ச ।
த்வாமம்ப ந விநா கிஞ்சித் த்வயி ஸர்வம் ப்ரதிஷ்டிதம் ॥
பவாநி தவ பாதாப்ஜநிர்ணேஜநபவித்ரிதா: ।
பவாமயப்ரசாந்த்யை த்வாமபோ யாசாமி பேஷஜம் ॥

—ஸ்ரீத்ரிபுரஸுந்தரீ வேதபாத ஸ்தோத்ரம்

காரணம், காரியம், கிரியை, ஞானம் எல்லாம் நீயே. உன்னிடத்திலேயே எல்லாம் இருக்கின்றன. உன்னைத் தவிர வேறொன்றும் இல்லை. பவானி, உன்னுடைய பாதங்களைக் கழுவியதனால் புனிதமடைந்த தீர்த்தத்தைப் பிறவிநோய் நீங்குவதற்கான மருந்தாக உன்னிடம் யாசிக்கிறேன்.

நாடும் நகரமும் நற்றிருக் கோயில்
தேடித் திரிந்து, சிவபெரு மானென்று
பாடுமின், பாடிப் பணிமின், பணிந்தபின்
கூடிய நெஞ்சத்துக் கோயிலாய்க் கொள்வனே.

—திருமந்திரம்



# ஸ்ரீராமகிருஷ்ணரின்

திங்கட்கிழமை, டிசம்பர் 24, 1883

ஸ்ரீராமகிருஷ்ணர்: அருவக் கடவுளும் உண்மை, உருவக் கடவுளும் உண்மை. சச்சிதானந்தப் பிரம்மம் எப்படிப் பட்டது என்று தோத்தாபுரி எனக்கு உபதேசித்திருக்கிறார். அது எல்லையற்ற ஓர் சமுத்திரம். எங்கும் எல்லையற்ற நீர்ப் பரப்பு. மேல் கீழ் இடம் வலம் என்று இல்லாமல் எங்கும் ஒரே தண்ணீர்மயம். தண்ணீர் அசைவற்று இருப்பது காரணப்பிரம்மம். தண்ணீர் அலைகளால் அசையும்பொழுது அது செயற்படுகிறது. இந்தச் செயல்கள்தாம் படைத்தல், காத்தல், அழித்தல் என்பன.

ஆராய்ச்சி (விசாரம்) செய்வது எங்கு நின்று விடுகிறதோ அங்கே அதுவே பிரம்மம். 'கர்ப்பூரத்தைக் கொளுத்தினால் எல்லாம் எரிந்துவிடு கிறது. சாம்பல்கூட மிஞ்சுவதில்லை' என்று எனக்குத் தோதாபுரி விளக்கினார்.

மனம் வாக்கிற்கு எட்டாதது பிரம்மம். உப்புப் பொம்மை கடலின் ஆழத்தை அளந்து கூறுவதாகச் சொல் லிச் சென்றது. திரும்பி வந்து செய்தி யைச் சொல்லவில்லை. கரைந்து கட லோடு கலந்துவிட்டது.

ஒரு சமயம் முனிவர்கள் இராமரைப் பார்த்து, 'பரத்வாஜர் போன்ற முனி வர்கள் உன்னை அவதார புருஷர் என்று சொல்லலாம். எங்களால் அவ்விதம் சொல்ல முடியாது. ஏனெனில் நாங்கள் நாதப் பிரம்மத்தை உபாசனை புரிகிற வர்கள். மானிட உருவத்தை நாங்கள் விரும்புவதில்லை' என்றார்கள். இராமர் புன்முறுவல் பூத்தவாறு அவர்கள் செய்த பூஜையை ஏற்றுக்கொண்டு அங்கிருந்து அகன்றார்.

ஆனால் நித்தியம் எதனுடையதோ, அதனுடையதே லீலையும். நான் ஏற் கனவே கூறியது போன்று மாடியும் மாடிப்படிகளும் போன்றது ஈச்வரலீலை.

தேவலீலை, நரலீலை, ஜகத்லீலை என்று பல லீலைகள் இருக்கின்றன. நரலீலை தான் அவதாரமாகும்.

நரலீலை என்பது என்ன? வீட்டின் கூரையிலிருந்து குழாய் வழியாகத் தண்ணீர் கொட்டுவது போன்றது. குழாய் வழியாகத் தண்ணீர் வெளிப் படுவது போல, சச்சிதானந்தத்தின் சக்தி மனிதவடிவத்தின் வழியாக வெளிப்படு கிறது. பரத்வாஜர் முதலிய பன்னிரண்டு முனிவர்களே முதன்முதலில் இராமரை அவதார புருஷர் என்று அறிந்து கொண்டனர். அவதார புருஷர்களை எல்லோராலும் அறிந்துகொள்ள முடிவ தில்லை.

இறைவன் மனித வடிவில் அவத ரித்து ஞானம், பக்தி முதலியவற்றை அளிக்கிறான்.

என் தந்தை கயாவிற்குச் சென்றி ருந்தார். அங்கே கோயில் கொண்டி ருக்கும் ரகுவீர் அவர் கனவில் தோன்றி, 'நான் உனக்கு மகனாய்ப் பிறப்பேன்' என்று கூறினார். என் தந்தை அந்தக் கனவில், 'இறைவனே! நானோ பரம ஏழை, உங்களுக்கு எப்படி நான் நல்ல சேவை செய்ய முடியும்?' என்றார். 'அதைப்பற்றிக் கவலைப்படாதே' என்று ரகுவீரிடமிருந்து பதில் வந்தது

என் சகோதரி அதாவது இருதயனின் தாயார் என் கால்கள் மீது சந்தனமும் மலர்களும் இட்டு வழிபடுவாள். ஒரு நாள் நான் அவள் தலைமீது கால்வைத்து

# அருள் வாக்கு

அவளிடம், 'நீ காசியில் உயிர் நீப்பாய்' என்று கூறினேன்.

**ஸ்ரீராமகிருஷ்ணர் :** கோபிகைகளிடம் பிரேமபக்தி இருந்தது. பிரேமபக்தியில் இரண்டு கூறுகள் உள்ளன. அவை 'நான்' 'எனது' என்பன. கிருஷ்ணனுக்கு நான் சேவை செய்யாவிட்டால் அவன் உடம்பு கெட்டுவிடும் என்று நினைப்பது ஒன்று. இது 'நான்' என்ற பிரேமபக்தி. இத்தகைய பக்தியில் கிருஷ்ணன் கடவுள் என்ற எண்ணம் வராது.

மற்றொன்று 'எனது' என்பது. கிருஷ்ணன் என் அன்புக்கு உரியவன், என்னுடையவன் என்று நினைப்பது. 'ஓடும்போது அவனுடைய கால்களில் அடிபட்டுவிட்டால் என்ன செய்வது?' என்று அஞ்சி, கோபிகைகள் தங்கள் சூட்சும சரீரத்தை எப்போதும் அவன் பாதங்களின் அடியிலேயே வைத்துக் கிடந்தார்கள். 'எனக்கு உங்கள் சிந்தாமணி கிருஷ்ணனைப்பற்றி எதுவும் தெரியாது. எனக்கு வேண்டுவது எல்லாம் என் கோபாலகிருஷ்ணனே' என்றுதான் யசோதை கூறுவாள். கோபிகைகளும், 'எங்கள் காதலன் கிருஷ்ணன் எங்கே? எங்களது இதய வல்லபன் எங்கே?' என்றுதான் கேட்டனர். அவர்களுக்குக் கிருஷ்ணன் பரம்பொருள் என்ற உணர்வே இல்லாமலிருந்தது. இவர் என் தந்தை என்று ஒரு சிறு குழந்தை கூறுவதைப் போன்றது இது. யாரேனும் ஒருவர் இந்தக் குழந்தையிடம், 'இவர் உன் தந்தையல்ல' என்று கூறினால், 'இல்லை. இவர்தாம் என் தந்தை' என்றே அந்தக் குழந்தை சாதிக்கும்.

தொடரும்

கயையில் ஸ்ரீராமகிருஷ்ணரின் தந்தை



# புதிய இந்தியாவைப் படைப்போம்

**புருளியா, ராமகிருஷ்ண மிஷன் கல்வி நிறுவனத்தில் மாணவர்களுக்கு ஆற்றிய உரை.**

பண்புள்ள மனிதனுக வாழவில்லை என்ருல் யாராலும் பெரிய காரியங்களைச் சாதிக்க முடியது.

உதாரணமாக, மகாத்மா காந்தி எத்தனையோ மகத்தான சாதனைகளைச் செய்தார். பண்புள்ளவராக இருந்த தனுல்தானே அவரால் அவ்விதம் செய்ய முடிந்தது?

இந்தக் காலத்தில் ஆண்டுதோறும் பல்கலைக் கழகங்களில் மாணவர்களுக்குப் பட்டமளிக்கும் விழா நடத்தப்படுகிறது. அப்போது உரைகள் நிகழ்த்தப்படுகின்றன.

பண்டைய நாட்களில் பட்டமளித்த போது நிகழ்த்தப்பட்ட உரைகளைப் பற்றி உபநிஷதங்களில் சொல்லப் பட்டுள்ளது. அவற்றில் முக்கியமாக எடுத்துரைக்கப்பட்ட விஷயங்கள் என்னவென்று நான் உங்களுக்குக் கூறுகிறேன்.



படிப்பு முடிந்து மாணவன் வீடு திரும்பு முன்பு ஆசிரியர் அவனுக்கு அறிவுரை வழங்குகிருர்: ''உண்மை பேசு. தர்மத்தின் வழி நட. சத்தியத்தை ஒருபோதும் கைவிடாதே. தர்மத்திலிருந்து ஒரு பொழுதும் விலகாதே. கீழ்த்தரமானது எதையும் செய்யாதே. நல்லது எதுவோ அதையே கடைப்பிடி. 'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்' என்பதை மறவாதே. ஆசிரியரைத் தெய்வமாக நினை.''

சுவாமி விவேகானந்தர் மேலும் இரண்டு அறிவுரைகளை இத்துடன் இணைத்துள்ளார். ''ஏழைகளிடம் தெய்வத்தைப் பார். படிக்காத பாமர மக்களும் உன் தெய்வமாக விளங்கட்டும்.''

பண்டைய பட்டமளிப்பு விழா உரைகளுக்கும் தற்கால உரைகளுக்கும் எவ்வளவு வேறுபாடு என்று பாருங்கள்! நோக்கத்தில்தான் எவ்வளவு வேறுபாடு!

பண்டைய கல்வி முறையில், ''பண்புள்ள மனிதனுக இரு. படிப்பை முடித்துப் பள்ளியை விட்டுச் செல்லுகிறீர்கள் என்பதனுல், மேன்மேலும் அறிவை வளர்த்துக்கொள்ளத் தவறவேண்டாம். கற்பதை நிறுத்தாதீர்கள். தொடர்ந்து கற்றுக்கொண்டே இருங்கள்'' என்று தம்மிடம் விடைபெற்று வீடு திரும்பும் மாணவர்களுக்கு ஆசிரியர் அறிவுரை

**ஸ்ரீமத் சுவாமி வீரேச்வரானந்தஜி மகராஜ்**

வழங்குவார். தற்காலப் பட்டமளிப்பு விழா உரைகள் இவற்றிலிருந்து வேறு பட்டு இருக்கின்றன. அவையும் தேவை தான். ஆனாலும் இக்காலத்தில் பண்புள்ள மனிதனை உருவாக்கும் கல்வியில் கவனம் செலுத்தப்படுவதில்லை.

நகரத்தின் ஆரவாரமோ சந்தடியோ உங்கள் கல்வியை எவ்விதத்திலும் பாதிக்கக்கூடாது. இதைக் கருத்தில் கொண்டுதான் இந்தப் பள்ளி ஓர் ஒதுக்குப்புறமான இடத்தில் நிறுவப் பட்டுள்ளது.

நீங்கள் உங்கள் படிப்பில் முழுக் கவனம் செலுத்த வேண்டியது அவசியம் தான் என்பதில் சந்தேகம் இல்லை. எனினும், நீங்கள் இந்தியர் என்பதை ஒரு கணமும் மறந்துவிடக் கூடாது.

நீங்கள் இங்கு இருப்பதனால் உங்களுக்கு வெளி உலகத்தோடும், மற்ற மக்களோடும் எந்தவிதத் தொடர்பும் இருக்காது என்று நினைக்க வேண்டாம். சுற்றுப்புறத்திலுள்ள கிராமங்களைக் காணவும், கிராம மக்களோடு பழகவும், அவர்கள் எப்படி வாழ்கிறார்கள், என்ன செய்கிறார்கள் என்பதை நேரிலே பார்க்கவும் உங்களுக்கு வாய்ப்புக் கிட்டும். அவர்கள் எவ்வளவு மோசமான சூழ்நிலையில் வாழ்கிறார்கள் என்பதை நேரிலேயே காண்பீர்கள்.

அந்த நேர்முக அனுபவத்தின் மூலம், ''பெரும்பான்மையான பாமர மக்கள் கவனிப்பாரற்று இருக்கும்போது, ஒருசிலர் மட்டும் கல்வியறிவு பெறுவதனால் நாட்டுக்கு எவ்வித நன்மையும் ஏற்படாது'' என்ற விவேகானந்தரின் கருத்து எவ்வளவு உண்மை என்பதை உணருவீர்கள். எல்லோரும் கல்வியறிவு பெற வேண்டும். இதை நீங்கள் மறக்கக் கூடாது.

நம் நாடு மீண்டும் உணர்வுபெற்று விழித்தெழ வேண்டுமாயின் கோடானு கோடி பாமர மக்களுக்கு முறையான கல்வி அளிக்கப்பட வேண்டும். தங்களுக்குத் தேவையான உணவையும் வாழ்க்கைத் தேவைகளையும் பெறுவதற்கு, வேண்டிய பணம் சம்பாதிப்பதற்கு அவசியமான தொழில்களும், தொழில்



நுட்பங்களும் அவர்களுக்குக் கற்பிக்கப் பட வேண்டும்.

தற்போது, உங்கள் படிப்பில் மட்டுமே நீங்கள் அதிகக் கவனம் செலுத்த வேண்டும். வறுமையில் வாடும் இந்த மக்களைப் பார்த்து, அவர்கள் அனுபவிக்கும் வேதனைகளை உங்கள் மனதில் நிறுத்தினால், காலக்கிரமத்தில் உங்களால் அவர்களுக்கு உதவிசெய்ய முடியும்.

பள்ளிப் படிப்பை முடித்து, உங்கள் வாழ்க்கையைத் துவங்குமுன் இரண்டு வருஷங்களை நாட்டின் சேவைக்கென்றே அர்ப்பணிக்க நீங்கள் யாவரும் முன்வர வேண்டும் என்று உங்களைக் கேட்டுக் கொள்கிறேன். வறுமையில் வாடி வதங்கும் மக்களோடும் கல்வியறிவற்ற பாமரர்களோடும் வாழ்ந்து, அவர்களை மதிப்பிற்கு உரியவர்களாக மாற்றுங்கள். அப்படிச் செய்வீர்களானால், உங்கள் வாழ்க்கையைத் துவங்குமுன்பு அவர்கள் அனைவருடைய ஆசிகளையும் பெறுவீர்கள். வாழ்க்கையை இவர்களின் ஆசியுடன் துவங்கினால் சென்ற இடமெல்லாம் சிறப்படைவீர்கள்.

உங்களுக்கு மற்றொன்றும் சொல்ல விரும்புகிறேன். இந்நாளில் புத்திசாலி



மதுபானம் கெட்டது. அது ஒரு தலைமுறையைக் கெடுத்துவிடும். ஆனால் புகையிலை எல்லாத் தலைமுறைகளையும் கெடுத்துவிடும்.

—கோவிந்தசிங்

அழுக்கடைந்த உடைகளிலோ, ஆடம்பரங்களிலோ, திருநீற்றிலோ, தலையை மொட்டை அடித்துக்கொள்வதிலோ, கொம்புத் தப்பட்டை முழக்குவதிலோ பக்தி இல்லை. உள்ளத் தூய்மையே பக்திக்கு அடையாளம்.

—குரு நானக்

களும், நன்கு படிக்கும் திறமை பெற்றவர்களும் வெளிநாடுகளுக்குச் செல்லவே விரும்புகிறார்கள். மேற்படிப்பிற்காக வெளிநாடு செல்வது நல்லதுதான்; என்றாலும், அறிவும் ஆற்றலும் தகுதியும் நிரம்பிய நம்மவர்கள் படித்தபின் அங்கேயே நிரந்தரமாக வாழ்வது என்பதை என்னால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை. எதற்காக அன்னிய நாட்டில் நிரந்தரமாக வாழ முற்பட வேண்டும்? உங்களை மனிதனாக்கிய இந்தியாவை, கொஞ்சம் பணம் அதிகம் கிடைக்கிறது என்பதற்காக மறந்துவிடுவது முறையா? அதிகம் பொருளீட்ட வேண்டும் என்பதற்காக, இந்தியாவை உதறித் தள்ளிவிடுவதா? சற்றே சிந்தித்துப் பாருங்கள். இந்தியாவிற்கு எதிராக நீங்கள் வாதம் செய்வீர்கள் என்பது எனக்குத் தெரியும். ''நீங்கள் சொல்வது யாவும் சரிதான். ஆனால், இந்தியாவில் ஊரூராக அலைந்து திரிந்தாலும் எங்கள் மீது யாரும் அக்கறை காட்டுவதில்லை. இங்கு ரூ. 200 சம்பளம் தரக்கூடிய ஒரு சிறிய வேலை கிடைப்பதற்குக்கூட எத்தனை இடையூறுகளைச் சமாளித்து எதிர்நீச்சல் போட வேண்டியிருக்கிறது? அமெரிக்கா சென்றாலோ 500, 1,000 ஏன், 1,500 டாலர்கூடச் சம்பளம் வாங்கும் வேலை வாய்ப்புக்கள் அதிகமாக உள்ளன'' என்று நீங்கள் சொல்வீர்கள். நீங்கள் கூறுவதில் உண்மை இருக்கிறது.




நம் நாட்டில் உண்மையான மேதைகளுக்கும் திறமைசாலிகளுக்கும் தகுந்த ஊதியம் கொடுப்பதில்லைதான். அப்படி இருந்தாலும்கூட, ''நீங்கள் இந்தியாவை நிரந்தரமாக விட்டுச் செல்லக் கூடாது. இந்தியாவை மறக்கக் கூடாது'' என்று நான் உங்களை வேண்டிக்கொள்கிறேன்.

விஞ்ஞானத் துறையில் குறிப்பிடத்தக்க சாதனை புரிந்துள்ள, பன்னிரண்டு பதின்மூன்று இந்தியர்களுக்கு அமெரிக்காவில் பரிசுகள் வழங்கப்பட்டதாக அன்றொரு நாள் செய்தித்தாள் ஒன்றில் பார்த்தேன். அதில் அவர்கள் ஒவ்வொருவருடைய பெயரும் தனித்தனியே குறிப்பிடப்பட்டிருந்தது. அவர்கள் எல்லோருமே இந்தியர்கள். ஆனால், இப்பொழுது அவர்கள் அமெரிக்கக் குடிமக்களாக மாறிவிட்டனர். இந்த நிகழ்ச்சியைப் பாருங்கள். இந்தியத் தாய் உங்களை ஊட்டி வளர்த்தாள். உங்களுக்குத் தேவையானவற்றையெல்லாம் அவளிடமிருந்து பெற்றுக்கொண்டீர்கள். இப்போது, தாய்நாட்டிற்குக் கைம்மாறு செய்ய வேண்டிய சமயத்தில் அதை விடுத்து, அன்னிய நாட்டிற்குப் பெருமை தேடித் தந்துள்ளீர்கள். இது

எவ்விதத்தில் நியாயம்? இதைப்பற்றியும் நீங்கள் ஆழ்ந்து சிந்திக்க வேண்டும்.

பணத்தின்மீதுள்ள ஆசையை மட்டும் வளர்த்துக்கொண்டு போவது நல்லதல்ல. இந்தியாவில் எவ்வளவோ அசௌகரியங்கள் உள்ளன என்பது உண்மை என்றாலும் நாம் நமது தாய்நாட்டை மறப்பது தவறு.

இங்கே படிப்பை முடித்து வெளியேறும் மாணவர்கள், சுவாமி விவேகானந்தர் விரும்பியபடி, பண்புள்ளவர்களாக இருக்க வேண்டும் என்றும், ஸ்ரீகுருதேவர், அன்னையார், சுவாமிஜி ஆகியோரின் அருள் இந்த மாணவர்களுக்கு எப்பொழுதும் கிட்ட வேண்டும் என்றும் பிரார்த்தித்துக்கொள்கிறேன்.

# தொண்டில் ஈடுபட ஒரு நல்ல வாய்ப்பு

அன்புள்ள வாசக நண்பரே!

கடவுளின் கிருபையை முன்னிட்டு எழுதுவது; வணக்கம் பல.

ஸ்ரீராமகிருஷ்ண மிஷன் கல்வி, கலாசாரம், மருத்துவம், பஞ்ச நிவாரண வேலைகள், கிராம முன்னேற்றம், சமய நூல்களை வெளியிடுதல், சமயப் பிரசாரம் போன்ற பல துறைகளிலும் பணிபுரிந்து வருவதைத் தாங்கள் அறிவீர்கள்.

ஸ்ரீராமகிருஷ்ணரும் சுவாமி விவேகானந்தரும் காட்டிய வழியில் விஜயம் (ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்) பத்திரிகை கடந்த 63 ஆண்டுகளாகத் தமிழக மக்களுக்கு அணிலைப் போன்று தன்னால் இயன்ற ஆன்மிகச் சேவையைச் செய்து வருகிறது.

விஜயம் பத்திரிகையுடன் எந்த விதத்திலேனும் தொடர்பு கொண்டுள்ள ஒவ்வொருவரும் ஸ்ரீராமகிருஷ்ணரின் தெய்விகக் குடும்பத்தைச் சேர்ந்தவரே ஆவர்.

விஜயம் பத்திரிகை வியாபார நோக்கத்தில் வெளியிடப்படவில்லை. நல்ல கருத்துக்கள் மேலும் மேலும் தமிழ்நாட்டில் பரவ வேண்டும் என்பதை மட்டுமே தலையாய நோக்கமாகக் கொண்டு, ஒரு தெய்வ கைங்கர்யமாக, சிரமத்தின் பேரில் நடத்தப்பட்டு வருகிறது.

சமீப காலமாக விஜயம் பத்திரிகை முழுவதும் ஆப்செட்டில் அச்சிடப்பெறுவதை அன்பர்கள் கவனித்திருப்பீர்கள்.

''ஆப்செட்டில் அச்சிடுவதற்குச் செலவு அதிகமாக ஆகும். குறைந்தது 20,000 பிரதிகளேனும் சர்க்குலேஷன் இருந்தால்தான் ஆப்செட்டில் அச்சிடுவதற்குக் கட்டுப்படியாகும். வியாபார நோக்கம் கொண்ட பத்திரிகைகளுக்கு மட்டுமே ஆப்செட்டில் அச்சிடுவது ஒத்து வரும். விஜயத்தை ஆப்செட் அச்சுக்கு மாற்றவே வேண்டாம்'' என்று பலரும் கருத்துத் தெரிவித்தனர்.

ஆப்செட்டில் அச்சிடுவதன் மூலம் பத்திரிகையின் தொண்டு இன்னும் நல்ல விதமாக இருக்கும் என்ற எண்ணத்தில், பலர் வேண்டாம் என்று ஆலோசனை தெரிவித்தும், விஜயத்தை ஆப்செட்டில் வெளியிடத் துணிந்து ஆரம்பித்துவிட்டோம். அதற்கு முக்கியக் காரணம், தைரியம் எல்லாமே விஜயம் வாசகர்தாம். அதாவது விஜயம் குடும்பத்தினராகிய அன்பர்கள் விஜயம் பிரதிகளின் விற்பனையைத் தாங்களே

அதிகப்படுத்தித் தந்துவிடுவார்கள் என்ற எங்களின் அசைக்க முடியாத நம்பிக்கைதான்.

ஆகவே விஜயம் பத்திரிகையின் விற்பனையை இரட்டிப்பாக்க, ஸ்ரீராமகிருஷ்ணரின் தெய்விகக் குடும்பத்தைச் சேர்ந்த நீங்கள் ஒவ்வொருவரும் குறைந்த பட்சம் ஒரு நபரையாவது விஜயத்திற்குப் புதிய சந்தாதாரராகப் பதிவு செய்தால்தான் பத்திரிகையின் உயர்ந்த நோக்கம் வெற்றி அடையும்.

இந்தக் கூப்பனையே நீங்கள் அனுப்ப வேண்டும் என்பதில்லை. ஆனால் அதில் கேட்டுள்ள தகவல்களை மட்டும் ஒரு கடிதத்தில் எழுதித் தெரிவித்தால் போதும்.

ஏன், நீங்கள் இதையே நல்ல ஒரு பரிசாக, உங்களுடைய உற்றார் உறவினர், நண்பர்களுக்கு அனுப்பக் கூடாது? உங்களால் முடிந்த வரையில் பலரைச் சந்தாதாரராக்குங்கள்!

கடவுள் தொண்டில்
அன்புள்ள
**சுவாமி தபஸ்யானந்தர்**

## உத்தரவுச் சீட்டு

சுவாமிஜிக்கு,

பின்வரும் அன்பர்களை விஜயம் வாசகர்களாக அதாவது புதிய சந்தாதாரர்களாகப் பதிவு செய்ய விரும்புகிறேன். ஆகவே அவர்களுக்குத் தவறாமல் தொடர்ந்து பத்திரிகைகளை அனுப்பி வைக்கவும். இது, நான் அவர்களுக்கு வழங்கும் ஒரு நல்லெண்ணப் பரிசாகும்.

**பெயர்** **அனுப்ப வேண்டிய முகவரி**

1.

2.

3.

4.

நான் இத்துடன் ஆண்டுச் சந்தாத் தொகை ரூ. 15 (ஆயுள் சந்தா ரூ. 180 அல்லது ஆயுள் சந்தா முதல் தவணை தொகை ரூ. ) மணியார்டர்/டி.டி. மூலம் அனுப்பியுள்ளேன்.

காரைக்கால் அம்மையார் இறைவனைப் பாடிய அற்புதத் திருவந்தாதி விளக்கம் இந்த இதழில் நிறைவுறப் போகிறது. இதுகாறும் நூறு வெண்பாக்களைப் பாடினார். இப்போது இறுதியில் 101-ஆவது வெண்பாவில் பயனைச் சொல்லப் போகிறார். நூல்களின் முடிவில், 'இதை ஓதினால் இன்ன நற்பயன் உண்டாகும்' என்று சொல்வது மரபு. திருஞானசம்பந்தப் பெருமான் தாம் அருளிய ஒவ்வொரு பதிகத்தின் இறுதிப் பாசுரத்திலும், பயனைச் சொல்வார். 'இந்தப் பாமாலையை ஓதி இறைவனைப் புகழ்பவர்கள் இன்ன பயனைப் பெறுவார்கள்' என்று சொல்கிறார் அம்மையார்.

# பாடலின் பயன்

கி. வா. ஜகந்நாதன்

அம்மையார் பாடிய இந்த நூல் இறைவனுக்குச் சூட்டிய பாமாலை; வாடாத மாலை. ஒரு பாட்டின் அந்தம் அடுத்த பாட்டின் ஆதியாகவும், இறுதிப் பாட்டின் ஈறு முதல் பாட்டின் முதலாகவும் இருத்தலால் இது அந்தாதி. அந்தாதியை வெவ்வேறு செய்யுட்களால் சொல்வதுண்டு. இது முழுவதும் வெண்பாக்களால் அமைந்த அந்தாதி.

**இம் மாலை அந்தாதி வெண்பா.**

இந்த அந்தாதி பேயுருவம் பெற்ற காரைக்காலம்மையார் சொன்னது. இந்த இறுதிப் பாட்டில் அவர் தம்மைக் காரைக்கால் பேய் என்றே சொல்லிக் கொள்கிறார்,

**காரைக்காற் பேய் சொல்.**

இந்த மாலையை அன்பர்கள் வாயாரப் பாடி மகிழலாம். வாக்கினால் பாடுபவர் சும்மா பாடினால் போதாது. உள்ளம் கரைந்து பாட வேண்டும்; வாயாரப் பாட வேண்டும். இந்தப் பாடல்களைப் பாடி இறைவனைத் துதிக்க வேண்டும். இத்தகைய பாடல்கள் நாமே இயற்றிப் பாடுவது என்பது இயலாத காரியம். அப்படி வருந்திப் பாட வேண்டிய அவசியமே இல்லாமல், 'யான் பெற்ற இன்பம் பெறுக இவ் வையகம்' என்ற எண்ணத்தால் அவரே பாடித் தந்திருக்கிறார். இந்த மாலையை மனங் கரைந்து இறைவனைப் பரவினால் அப்படிப் பரவுகிறவர்களுக்கு என்ன கிடைக்கும்?

இங்கே இருந்து பாடுபவர்களுக்கு இந்தப் பிறவிக்குப் பிறகு சிவலோக பதவியே கிடைக்கும். சிவலோகத்திற்குச் சென்றால் அங்கே நேரே சிவபிரானைத் தரிசிக்கலாம். அன்பர்களுக்குத் தெவிட்டாத அன்பு இருக்கும், குறையாத பக்தி அமைந்திருக்கும். அந்த அன்பினோடு இறைவனை அணுகிச் சென்று அவன் திருமுன் நின்று ஏத்தும் நிலை உண்டாகும்.

**பரவுவார்**
**ஆராத அன்பினோடு அண்ணலைச் சென்று ஏத்துவார்.**

இயல்பாகவே அன்புடைய அவர்கள் இறைவனுடைய சாமீப்பியத்தை அடைந்தவுடன் அவர்களுடைய அன்பு பன்மடங்கு பெருகிவிடும். என்றும் நீங்காத பேரன்பு தோன்றும். இறைவனை இங்கே இருக்கும்போது ஏத்துவதையே இன்பமாகக் கொள்ளும் அவர்கள் சாமீப்பிய பதவியைப் பெறுவார்கள். அங்கும் என்றும் பேராமல் நிலைத்து நிற்கும் காதல் பிறந்த அவர்கள் என்றும் இன்பமே நிறைந்து நிற்பார்கள்.

**பேராத காதல் பிறந்து.**

இங்கே இறைவனை இந்த மாலையால் பாடிப் பரவியவர்கள் கைலாயத்தை அடைந்து இறைவனுடைய அணிமையில் இருக்கும் சாமீப்பியத்தைப் பெற்று, அங்கும் பெருங் காதலோடு நின்று ஏத்துவார்கள்.

**உரையினால் இம்மாலை**
**அந்தாதி வெண்பாக்**





கரைவினால் காரைக்காற்
பேய் சொல்-பரவுவார்
ஆராத அன்பினோடு
அண்ணலைச் சென்று ஏத்துவார்,
பேராத காதல் பிறந்து.

இந்த வெண்பா அந்தாதி மாலையாகிய காரைக்கால் பேயின் சொல்லைத் தம்முடைய வாக்கினால் மனக்கசிவோடு சொல்லி இறைவனைத் துதிக்கும் அன்பர்கள், என்றும் அடங்காத அன்போடு, என்றும் நீங்காத பக்தி பிறந்து, இறைவனிடம் சென்று துதித்துக்கொண்டே இருப்பார்கள்.

[உரையினால்-வாயினால்; ஆகுபெயர். மாலை அந்தாதி வெண்பா- வெண்பா அந்தாதி மாலை. வெண்பாவை. கரைவு-மனக்கசிவு; நெகிழ்ச்சி. கரைவினால்–கரைவோடு. வெண்பாவாகிய காரைக்காற் பேய் சொல் என்று கூட்டுக. பரவுவார்-துதிப்பவர். ஆராத-தெவிட்டாத; இதோடு போதும் என்ற அமைதி உண்டாகாத. அன்பு என்றது பக்தியை; பேராத காதல் என்பது முறுகிய பக்தியை. அந்த அன்பே இன்பமாக இருக்கும். அண்ணல்-பெருமை உடையவன். சென்று என்றது 'இறைவனிடம் சென்று, என்று பொருள் கொள்ளுவதற்குரியது. இது சாமீப்பிய பதவியைக் குறித்தது. அண்ணலை-அண்ணலிடம்; உருபு மயக்கம். சென்று அண்ணலை ஏத்துவார் என்றும் கூட்டிப் பொருள் கொள்ளலாம். அன்பு முறுகிக் காதல் பிறக்கும்.

''எம்முறை அன்பின் வந்த
அகனமர் காதல் ஐய''

என்று இவ்விரண்டையும் கம்பராமாயணம் கூறுவது காண்க.

''காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி''

என்ற தேவாரத்தில் காதலும் கசிவும் வந்தன.]

இந்தப் பாட்டில் ஈற்றில் உள்ள சொல் 'பிறந்து' என்பது. இந்த அந்தமே அந்தாதியின் முதற் பாட்டின் முதலில், 'பிறந்து மொழி பயின்ற' என்று வந்திருக்கிறது. இதை மண்டலித்தல் என்பர். பூவைச் சரமாகத் தொடுத்துச் சரத்தின் இரண்டு தலைப்பையும் முடிந்துவிட்டால் அது வட்டமான மாலையாகத் தோற்றம் அளிக்கும். அப்படியே இதுவும் வட்டமாக மண்டலமாகத் தோன்றுகிறது. அந்தாதி மண்டலித்து வர வேண்டும் என்பது இலக்கணம்.

இறைவனை இந்தப் பாமாலையால் துதிப்பவர்கள் சாமீப்பிய பதவியைப் பெறுவார்கள் என்பது கருத்து.

இது அற்புதத் திருவந்தாதியின் இறுதியில் வரும் 101—ஆவது பாட்டு.

---

கி. வா. ஜ. அவர்கள் விரைவில் திருவாசகம் குறித்து விஜயத்தில் எழுத இருக்கிறார்.

# சிறுவர் பகுதி

## கடவுளுக்கு... நன்றி





ஒரு பெரிய குளம். அதில் அழகான ஆமை ஒன்று தன் நண்பன் மீனுடன் வாழ்ந்து வந்தது. அது ஒரு நாள தண்ணீரை விட்டு வெளியேறி வெளி உலகத்தைக் காணப் புறப் பட்டது.



ஆமை மெதுவாக நடந்து வரு வதை ஓர் எலி வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தது. அது, ''என்ன ஆமையாரே, இப்போதுதான் நடக்கப் பழகுகிறீரா?'' என்று கேலியாகக் கேட்டது.



ஆமை, மேட்டிலிருந்து இறங்கும் போது மண் சரிந்து தலைகீழாய் உருண்டது. எலி தன் நண்பன் முய லிடம், ''ஆமை சர்க்கஸ் விளையாட்டு விளையாடுவதைப் பார்த்தாயா! எவ் வளவு அழகாக இருக்கிறது!'' என்று சொல்லிக் கேலி செய்தது. இதை முயல் உண்மை என்று நம்பி மகிழ்ச்சி யுடன் வேடிக்கை பார்த்துக்கொண் டிருந்தது.



ஆமை மெதுவாக நடந்து கொண்டிருந்தது. எலி, ''தவளையாரே,

தவளையாரே, ஓடி வாருங்கள், ஆமையாரின் நடையழகைப் பாருங்கள்'' என்று தவளையை அழைத்து ஆமையைப் பரிகாசம் செய்தது. எலியின் செயல்களினால் ஆமை மனமுடைந்து போயிற்று.



குறும்புக்கார அந்தப் பொல்லாத எலி முள்ளை இழுத்து வந்து ஆமையின் முதுகின் மீது ஏறி நின்றுகொண்டு முள்ளினால் ஓங்கி ஓங்கித் தலையில் அடித்து மகிழ்ந்தது. ஆமை வலி தாங்காமல் துடிதுடித்தது.



'நம்மிடம் அன்பு காட்ட யாருமில்லையே? வெளியுலகைக் காண வந்த இடத்தில் இப்படி அடித்து என்னைத் துன்புறுத்துகிறார்களே ! இது என்ன உலகம்?' என்று ஆமை வருத்தத்துடன் அழுதுகொண்டே குளத்திற்குத் திரும்பி வந்தது.

**கதையும் - படமும்**
**எஸ்.கே. ராமானுஜம் (ரானு)**



ஆமை நீருக்குள் இறங்கியதும், 'இக்கரைக்கு அக்கரை பச்சை என்று நினைத்தது எவ்வளவு பெரிய தவறு! இனிமேல் ஆசைப்பட்டுக் குளத்திற்கு வெளியே போய் அடி வாங்கிக்கொண்டு வரக்கூடாது' என்று சொல்லிக் கொண்டே மீனைத் தேடிச் சென்றது.



''என்ன ஆமையாரே! சீக்கிரம் திரும்பிவிட்டீர்கள்? வெளியுலகைப் பார்த்தீர்களா? எப்படி இருக்கிறது? ஏன் ஒன்றும் பேசாமல் வருத்தமாக இருக்கிறீர்கள்?'' என்று மீன் ஆமையிடம் கேட்டது.

அதற்கு ஆமை, ''நீதான் 'உனக்கு நடக்கத் தெரிகிறதே, ஏன் எங்களுடன் நீந்திக்கொண்டு திரிகிறாய்? வெளியே போனால் நடக்கும் பிராணிகளுடன் நண்பனாகி நன்றாக விருப்பம் போல் நடந்து எங்கும் போகலாம்' என்று சொன்னாய். நான் வெளியில் போனதும் எல்லாப் பிராணிகளும் என்னைக் கேலி செய்து சிரிக்கின்றன. துன்புறுத்தி மகிழ்கின்றன. எலிப் பயல் என்னை விரட்டி அடிக்கிறான். அதனால் திரும்பி வந்துவிட்டேன்'' என்று வருத்தத்துடன் சொன்னது.



மீன் ஆமையிடம், ''போயும் போயும் எலிக்குப் பயப்படலாமா? உனக்குக் கடவுள் தந்த கனமான ஓடு ஒரு வீடு போலிருக்கிறது. கடவுளின் படைப்பில் நம்மைப் போல் எலியும் ஒரு பிராணிதான். தைரிய மாகப் போய் அவனுடன் பழகி அவனை உன் நண்பனாக்கிக்கொள்'' என்று தைரியம் சொல்லி அனுப்பியது. ஆமையும் தைரியமாக வெளியேறியது.



ஆமை தண்ணீருக்குள்ளிருந்து வேறு பக்கமாகச் சென்று தன் தலையைத் தூக்கியது. அங்கே ஆமை யைத் தொந்தரவு செய்வதற்காக எலி காத்துக்கொண்டிருந்தது. ''ஆமை யாரே, உங்களுக்காகத்தான் காத்துக் கொண்டிருக்கிறேன். வருக! வருக!'' என்று எலி கூறியதும், ஆமை அதிர்ச்சி அடைந்து பயத்தால் நடுங்கியது.





எலிக்குப் பயந்து மிரண்ட ஆமை குளிர்காய்ச்சல் கண்டு நடுங்கிக் கொண்டே மீண்டும் தண்ணீருக்குள் திரும்பி வந்தது.



ஆமை மீனிடம், ''உன் பேச்சைக் கேட்டு நான் வெளியில் சென்றது தப்பு. இனிமேல் உன் பேச்சைக் கேட் டால், நான் உயிருடன் இருக்க முடி யாது. இங்கே தண்ணீருக்குள் இருப்பது தான் எனக்குப் பாதுகாப்பாகும். எலிப் பயல் வெளியில் இருக்கிறான், போய்ப் பார்'' என்று சொன்னது.



''நீ இங்கேயே இரு, நான் அவனிடம் போய் பேசிப் பார்த்து வரு கிறேன்'' என்று மீன் தண்ணீருக்கு மேலே சென்றது.



மீன் எலியிடம், ''ஏன் ஆமையைத் துன்புறுத்துகிறுய்? அவன் உனக்குப் பயந்துகொண்டு உள்ளே இருக்கிறுன். பாவம்! அவனும் உன்னைப் போல் அழகாக நடக்கிறுன். அவனையும் சேர்த்துக்கொண்டு விளையாடு. கடவுள் படைப்பில் நாம் எல்லோரும் ஒன்று தானே!'' என்று சொன்னது.

எலி, ''பெரிய கடவுள் படைத்து விட்டாராம்! எங்களைப்போல் அவன் ஓட முடியுமா? எனக்குத் தெரியும், உன் வேலையைப் பார்த்துக்கொண்டு நீ போ'' என்று மீனிடம் சொன்னது.



கோபம் கொண்ட மீன் திடீரென்று இதுதான் சமயமென்று எலியின் வாலைக் கடித்துத் தண்ணீருக்குள் இழுத்துவிட்டது.





எலி தண்ணீரை 'மடக் மடக்' என்று குடித்து மூச்சுத் திணறி உயிருக்குப் போராடியது.



எலி தவளையைப் பார்த்து, ''தவளையாரே, சாகப் போகிறேன், என்னைக் காப்பாற்றுங்கள்'' என்று கூறியது. அதற்குத் தவளை, ''நீ எல்லோரையும் மட்டம் தட்டிக் கேலி செய்கிறுய். ஆமையார் கத்தக் கத்த முள்ளால் அடித்துத் துன்புறுத்தி மகிழ்ந்தாய். உனக்கு இதுதான் கடவுள் கொடுத்த சரியான தண்டனை'' என்று சொல்லிவிட்டுத் தாவிப் பாய்ந்தோடியது.



எலி, ''ஒருவருமே என்னைக் காப்பாற்ற மாட்டீர்களா? ஐயோ!

கடவுளே! என்னைக் காப்பாற்று, காப்பாற்று'' என்று கதறியது.



'கடவுளே காப்பாற்று என்று யாரோ கதறுகிறார்களே! யாராக இருக்கும்? யாரோ தண்ணீருக்குள் விழுந்து தத்தளிக்கிறார்கள் போல் இருக்கிறது' என்று நினைத்த ஆமை, குரல் வந்த திசையில் சென்றது,



'அடடா! எலிப்பயல் விழுந்து விட்டான். நமக்கு எவ்வளவு துன்பம் செய்தான்! பாவம் · சாகப்போகிறான். காப்பாற்றுவோம்!' என்று நினைத்து, ஆமை எலியின் அருகில் சென்றது.



''எலியே, என்ன அவசரம்? பார்த்து வரக்கூடாதா? அவரவர் இடத்தில் அவரவர் இருக்க வேண்டும். நீ வெளியில் இருந்தால் உனக்கு வலிமை அதிகம்; முயல் உனக்கு உதவி செய்யும். நான் தண்ணீரில் இருந்தால் எனக்கு வலிமை அதிகம்; மீன் எனக்கு உதவி செய்யும். சரி சரி, என்ன செய்வது? விழுந்துவிட்டாய்! என் முதுகில் உட்கார்ந்துகொள். நான் உன்னை வெளியில் கொண்டுபோய் விடுகிறேன்'' என்றது ஆமை. சாகும் தறுவாயில் இருந்த எலி ஆமையின் முதுகில் உட்கார்ந்துகொண்டது.



ஆமை பத்திரமாக எலியைக் கரையேற்றிவிட்டது. பிழைத்துக் கொண்ட எலி, ''ஆமையண்ணா, என்னை மன்னித்து விடுங்கள். தக்க சமயத்தில் கடவுள் போல் வந்து என் உயிரைக் காப்பாற்றினீர்கள். நீங்கள் தான் கடவுள், மிக்க நன்றி!'' என்று சொல்லிப் பணிவுடன் வணங்கியது.

அதற்கு ஆமை, ''நான் ஒன்றும் கடவுள் இல்லை. கடவுள்தான் உன் கதறலை எனக்குத் தெரியப்படுத்தி உனக்கு உதவி செய்ய உதவினார். அவருக்குத்தான் நாம் நன்றி சொல்ல வேண்டும்'' என்று பதில் கூறியது.







எலி முயலிடம், ''ஆமையார் ரொம்ப நல்லவர். நான் அறியாமல் அவரைத் துன்பப்படுத்தினேன். நான் தண்ணீரில் விழுந்தபோது அவர்தான் என்னைக் காப்பாற்றினார். துன்பத்திலும் நன்மை செய்கிற தூய மனம் படைத்த ஆமையாரைப் போல் நான் எவரையும் கண்டதில்லை'' என்று பெருமையுடன் கூறியது. முயலும், ''அப்படியா!'' என்று ஆச்சரியப்பட்டது.



எலி ஆமையிடம், ''ஆமை யண்ணா, நீங்கள் குளத்தை விட்டு எப்போது வேண்டுமானாலும் தாராள மாக இங்கே வாருங்கள். கடவுள் படைப்பில் உயிர் வாழும் இனங்களில் நாம் எல்லோரும் ஒன்றுதான். என்னால் இயன்ற உதவியைத் தங்களுக்குச் செய்ய எப்போதும் காத்திருக்கிறேன்'' என்று சொன்னது.

எலி சொன்னதைக் கேட்டதும் ஆமை 'நமக்கு நண்பர்கள் ஏராளமாகிவிட்ட னர்' என்பதை அறிந்து மிகவும் மகிழ்ச்சி யாக வாழ்ந்து வந்தது. 

## காந்தியடிகளின் பொன்மொழிகள்







* நாலு பேர் மெச்சப் புரியும் வழிபாடு அகந்தையையே வெளிப்படுத்துவதாகும். எளியோருக்குத் தொண்டு செய்வதுதான் உண்மையான கடவுள் தொண்டாகும்.
* தினசரி வாழ்க்கையில் ஏற்படும் குழப்பங்களும் துயரங்களும் அடங்கி உள்ளத்தில் அமைதி உண்டா வதற்குப் பிரார்த்தனையைவிடச் சிறந்த வழி வேறில்லை.
* சுவாமி விவேகானந்தரின் நூல்கள் அனைத்தையும் மிகவும் அலசிப் படித்திருக்கிறேன். அதன் காரணமாக தாய்நாட்டின் மீதுள்ள எனது அன்பு ஆயிரம் மடங்கு பெருகியிருக்கிறது.





# எனது என்ற எண்ணம்

யான் எனதென்னும் செருக்கறுப்பான் வானோர்க்கு
உயர்ந்த உலகம் புகும்

என்ற பொய்யாமொழிப்படி, யான் எனது என்ற இருவகைப் பற்றுக்களை அறுக்க வேண்டும். முதலில் புறப் பற்ருகிய எனது என்பதை அறுக்க வேண்டும். பின்னர் யான் என்ற அகப்பற்றை அறுக்க வேண்டும். நமக்குத் தொடர்பில்லாத இவ்வுலகப் பொருள்கள் அனைத்தையும் 'என்னுடையது, என்னுடையது' என்று எண்ணி, ஒவ்வொருவரும் உயிரை விடுகின்ருர்கள். உடம்பை விட்டு உயிர் பிரிகிறபோது ஒன்ருவது உடன் வருவதில்லை. உலகிலுள்ள பொருள்களில் அளவற்ற பற்று வைத்து அவை முழுவதும் தனக்கே ஆகவேண்டும் என்று விரும்பி ஏங்கி ஏங்கி இளைத்து அயர்கின்றனர்.

எனதி யானும் வேருக எவரும் யாதும் யாளுகும்
இதய பாவளுதீதம் அருள்வாயே

என்ற அருணகிரிநாதருடைய அமுத வாக்கு மனிதனைப் புனிதனுக்குகிறது.

எல்லாவற்றையும் இறைவனுடைய பொருள்களாக எண்ணி அமைய வேண்டும்.

அளவற்ற நிலம் உடையவனேயாயினும் அவன் உண்பது காற்படி அரிசிதானே? பல வீடுகள் ஒருவனுக்குச் சொந்தமாக இருப்பினும் அவன் படுப்பது ஆறடி நீளமுள்ள இடத்தில்தானே?

நம என்ற சொல்லுக்குப் பொருள் : ம-என்னுடையது; ந-இல்லை. நம-என்னுடையது இல்லை. நம நம என்று இறைவன் திருவடியில் மலரிட்டு அர்ச்சிப்பது, எனதன்று என்று தற்போதத்தை இழப்பதற்காகவே என அறிக. ஒரு பொருள், தன்னுடையதன்று என்று எண்ணுவோர்க்கு அந்தப் பொருள் தன்னை விட்டு விலகும்போது மனக் கவலை வராது.

யாதனில் யாதனில் நீங்கியான் நோதல்
அதனில் அதனில் இலன்

என்பார் திருவள்ளுவர்.

ஆதலால், பற்றற்றவனே பரம ஞானி. அவனுக்கு இன்பமும் துன்பமும் எய்தமாட்டா.

மனைவி மக்கள் வீடு வாசல் நில புலங்களுடன் கூடியிருப்பினும் அவற்றுக்கும் தமக்கும் தொடர்பில்லை என்று ஜனகர் மாதிரி தாமரையிலைத் தண்ணீரைப் போல் வாழ வேண்டும்.

திருமுருக கிருபானந்த வாரியார்

எனது என்ற பற்றுள்ளவனுக்கு மேலுலகத்தில் இடமில்லை.

சிலர் இந்த வீடுகள் என்னுடையவை என்கின்றனர்; 'என்ன டகை வருகிறது?' என்று கேட்டால், 'இவற்றை விற்றுப் பன்னிரண்டு ண்டுகள் ஆகிவிட்டன' என்கின்றனர். விற்றுவிட்ட வீட்டையும் நிலத்தையுங்கூட என்னுடையவை என்பதில் ஒரு திருப்தியடைகிறான் மனிதன். என்னே அறியாமை! பாவங்கள் பல செய்த ஒரு கிழவி நரகில் தீயிடைக்கிடந்து நெளியும் புழுவைப் போல் துடித்துக்கொண்டிருந்தாள். அவ்வழியே ஒரு தேவதூதன் சென்றான். அவனைக் கண்ட கிழவி, "ஐயா புண்ணியமூர்த்தி! என்னால் இந்த நரக வேதனையைத் தாங்க முடியவில்லை. உனக்குக் கோடி புண்ணியம் வரும். என்னை இதனின்றும் கை தூக்கிவிடு" என்று ஈனமான குரலில் அலறினாள்.

தேவதூதனுக்கு இரக்கம் உண்டாயிற்று. "கிழவியே! உன்னை நான் சுவர்க்கத்தில் சேர்க்க வேண்டுமாயின் புண்ணியம் செய்திருத்தல் வேண்டும். நீ ஏதாவது புண்ணியம் செய்திருக்கிறாயா?" என்று கேட்டான்.

அந்தக் கிழவி, "ஐயனே! எனக்கு ஏராளமான செல்வங்கள் இருந்தன. எல்லாம் என்னுடையவை என்னுடையவை என்று வைத்துக் காப்பாற்றினேன். அவற்றில் இங்கு ஓர் அணுக்கூட வரவில்லை. அறியாமையால் கெட்டேன். கருணாநிதி! பொறுக்க முடியாத வேதனையால் தவிக்கும் என்னைக் காப்பாற்று" என்றாள்.

தேவதூதன் : கிழவியே! ஒன்றுமே தருமம் செய்யவில்லையா?

கிழவி: கண் தெரியாதவர்கள் வந்து கேட்டால் காலணாப் போடுவேன்.

தேவதூதன் : நல்லது; காலணாவாவது தந்தாயே!

கிழவி : காலணாப் போட்டு நாலணா எடுத்துக்கொள்வேன்.



தேவதூதன்: அடி பாவி! கண்ணில்லாதவர்க்கு உபசரிக்க வேண்டாமா? எறும்புக்கு நொய்யரிசி போட்டாயா?

கிழவி: இல்லை, நெருப்புத்தான் போட்டேன் ஐயா! நான் செய்த பாவங்களுக்கு அளவில்லை. இப்போது அறிகிறேன்; என்னை மன்னித்துக் கரையேற்று.

தேவதூதன்: அம்மா! ஒரு சிறிதும் புண்ணியம் செய்யாதார் புண்ணிய உலகை அடைய மாட்டார். கடுகு நுழைய இடமிருந்தால் கடப்பாரையை நுழைப்பேன். அணுவளவும் தருமம் புரியாத உன்னை நான் எப்படிக் காப்பாற்ற முடியும்?

கிழவி: இப்போது நினைவுக்கு வருகிறது. ஐயா! ஒரு நாள் நான் வாழைப்பழம் சாப்பிடும்போது ஒரு பழத்தில் பாதி அழுகியிருந்தது. அந்த அழுகிய பாதியுடன் அழுகாத பாதியையும் சேர்த்து ஒரு பிச்சைக் காரிக்குப் போட்டேன்.

தேவதூதன் 'நல்லது' என்று கூறினான். அங்கு அந்தப் பாதி வாழைப்பழம் வந்து நின்றது. அந்தப் பாதியிற் பாதியைத் தேவதூதன் பற்றி, கிழவியை மற்றப் பாதியைப் பற்றுமாறு செய்து, அதன் மூலம் அவளை நரகினின்று எடுத்தான். நரகிலே இருந்த மூன்று நான்கு பாவிகள் கிழவியின் காலைப் பற்றிக்கொண்டார்கள். கிழவி தொடக்கத்தில் அதனை அறியவில்லை. தேவதூதன் மெல்ல அவளை மேலுலகிற்குக் கொண்டு போகும்பொழுது கிழவி தன் காலைப் பற்றிக் கொண்டு வருபவர்களைக் கண்டு சீற்றமுற்றாள். ''ஏய்! என் வாழைப் பழத்தைப் பற்றிக்கொண்டு நான் சுவர்க்கம் போகிறேன்; நீங்கள் யார் என் காலைப் பற்றிக்கொண்டு வருகிறீர்கள்?'' என்று கூறினாள்.

தேவதூதன், ''கிழவியே! தருமம் செய்த பழத்தை என்னுடையது என்று கூறுவது பொருந்துமா? உன் பழத்தை நீயே பிடித்துக் கொள்'' என்று விட்டுவிட்டான். கிழவி பழையபடியே நரகில் வீழ்ந்தாள்.

ஆகவே எனது எனது என்ற எண்ணமுள்ளோர் அருளுலகம் அடையார்.



கடலில் இருக்கும் மீன் நீரை நாடி எங்கும் போக வேண்டியதில்லை. அதன் உள்ளும் புறமும் நீரே நிறைந்திருக்கிறது. இது போலவே கடவுள் நம் உள்ளத்தில் நீக்கமற நிறைந்திருக்கிறார். அவரது சாந்நித்தியத்தை உணர்வதே நல்ல அர்ச்சனையாகும்.

—ஔவை குறள்

ஆணவம் இருக்கும் வரை ஆத்மா பிரகாசிக்காது.

—ஒரு துறவி

கருமியிடம் உள்ள செல்வத்தினால் பயன் இல்லை. துஷ்டனிடம் உள்ள கல்வியினால் பயன் இல்லை. நல்லியல்பு எதுவும் இல்லாதவனிடம் உள்ள அழகினால் பயன் இல்லை. ஆபத்துக்கு உதவாத நண்பனின் நட்பினாலும் பயன் இல்லை.

—பிருகஸ்பதி இயற்றிய நீதிசாரம்

ஊழ்வினையை விளக்கும் வகையில் மகாபாரதத்தில் இடம் பெற்றுள்ள கதை இது.




# விதியின் வலிமை

## 1

பீஷ்மர் அம்புப் படுக்கையில் படுத்திருக்கிறார். பிதாமகரின் இறுதிக்காலத்தைப் பற்றிப் பாண்டவர் ஐவரும் வேதனையுறுகின்றனர். ஐவரும் பீஷ்மரின் அருகில் இருந்து உபசாரங்கள் செய்கின்றனர்.

அப்போது தர்மபுத்திரர் பீஷ்மரை நோக்கி, ''பிதாமகரே! அம்புகளினால் தாக்கப்பட்டுத் தங்கள் உடல் புண்பட்டிருக்கிறது. இதனைக் காண என் இதயம் வேதனையுறுகிறது. தங்களுக்கு நேர்ந்த இந்தத் துன்பத்திற்கு எனது மண்ணாசையன்றோ காரணம்? இந்த அடாத செயலைச் செய்தவனாகிய நான் இன்று உமது பிரிவுக்காக வருந்துவது எனக்கே வெட்கமாக இருக்கிறது. என் பொருட்டாக எத்தனை அரசர்கள் மாண்டனர்! இத்தகைய கொடிய பாவத்தைச் செய்த எனக்கு என்ன கதி ஏற்படுமோ என்று மனம் அஞ்சுகிறது. இன்று தங்களின் கஷ்டநிலையைக் காணத் துரியோதனன் இல்லை. அவன் மாண்டொழிந்தான். நான் உயிருடன் இருக்கிறேன். நானும் யுத்தத்தில் உயிரிழந்திருந்தால் தங்களின் இந்தத் துன்பத்தைப் பார்த்திருக்க மாட்டேன். நான் செய்த பாவத்தை எவ்வாறு போக்குவேன்? என் தீவினையைப் போக்க ஏதாவது உபாயத்தைக் கூறியருள வேண்டும்'' என்று கேட்கிறார்.

பீஷ்மர் கூறுகிறார் — தர்மபுத்திரா! இப்போது நான் அடைந்திருக்கும் துயரத்திற்கு நீ காரணமல்ல. இதற்கு என் கர்மமே காரணம். கர்மம் ஐம்புலன்களுக்கும் அப்பாற்பட்டது. உனக்கு இதை ஓர் உதாரணத்தால் விளக்குகிறேன்.

## 2

கௌதமி என்ற ஓர் உத்தமி இருந்தாள். அவள் பிராம்மண குலத்தில் பிறந்தவள்; வயது முதிர்ந்தவள்.

அவளுக்கு ஒரு மகன் உண்டு. அவனைத் திடீரென்று அரவம் தீண்டியது. அவன் உயிரிழந்தான். அருகில் இருந்த அர்ச்சுனகன் என்ற வேடன் இதனைக் கண்டான். விரைவில் அந்தப் பாம்பைப் பிடித்து வில்லின் நரம்பில் சுருக்கிட்டு, கௌதமியிடம் கொண்டு வந்தான். ''தாயே! உன் மகனைத் தீண்டிய நாகம் இதோ இருக்கிறது. இதைத் துண்டம் துண்டமாகத் துணிக்கலாமா? அல்லது சித்திரவதை செய்யலாமா? எப்படிச் செய்ய வேண்டும்? இந்தப் பாம்பை உயிரோடு விடுவது தவறு. இதனால் பலருக்கு இடையூறு உண்டாகும்'' என்றான்.

கௌதமி, ''வேடனே! இந்தப் பாம்பை விட்டுவிடு. இந்தப் பாம்பைக் கொல்வதனால் என் மகன் பிழைத்து

அலங்காரம் தேவராஜன்

வரப்போகிறுனு? அல்லது இதைக் கொன்றதனுல் உலகிலுள்ளோர் இறவாம லிருப்பார்களா? விதியின் விளையாட்டை யாரால் விலக்க முடியும்? விதி முடிந்தது; அது காரணமாக என் மகனும் இறந் தான். அதற்கு இந்தப் பாம்பு என்ன செய்யும்?'' என்ருள்.

வேடனே அந்தப் பாம்பை விடவில்லை. கௌதமியை நோக்கி, ''தாயே! உங் களைப் போன்ற ஞானிகளுக்கு இதன் குற்றமோ குணமோ தோன்றுவதில்லை. துஷ்ட ஜந்துக்களைக் கண்டால் என்னைப் போன்றவர்கள் விடமாட்டார்கள். எனவே இந்தப் பாம்பைக் கொன்றே தீருவேன். இதற்குத் தாங்கள் அனுமதி கொடுக்க வேண்டும்'' என்ருன்.

கௌதமி, ''என் போன்ற சாதுக்கள் எப்பொழுதும் தர்மத்தையே தழுவிக் கொண்டிருப்பவர்கள். எங்களுக்குத் துக்கம் என்று எதுவுமில்லை. இந்தப் பாம்பின் உயிரை நீக்க உன்னை ஏவுவதற்கு எனக்கு அதிகாரமில்லை. அன்புடைய வனே! இதன் மேலுள்ள கோபத்தினின்று நீங்கி இந்தப் பாம்பை நீ கொல்லாமல் விட்டுவிடு'' என்ருள்.

வேடன், ''தாயே! இந்தக் கொடிய சர்ப்பத்தைக் கொல்வதனுல் உண்டாகும் நன்மை அளவற்றது. இதனைக் கொல்வ தனுல் பலருக்கு நலன் விளையும். இதைக் கொல்லாமல் விட்டால் பல உயிர் களுக்கும் தீமையே உண்டாகும். ஆகை யால் இதைக் கொல்வதே அறமாகும்'' என்ருன்.



கௌதமி, ''அர்ச்சுனகா! இதைக் கொல்வதனுல் எந்தவிதமான பலனும் கிடைப்பதாகத் தோன்றவில்லை. உடனே இதை விட்டுவிட்டு'' என்ருள்.

வேடன், ''அம்மையே! இந்தக் கொடிய ஜந்துவினிடம் கருணை காட்டக் கூடாது. இதைக் கொல்ல உடனே அனுமதி கொடுங்கள்'' என்ருன்.

கௌதமி அதற்கு இசையவில்லை.

## 3

இவர்களது உரையாடலைக் கேட்டுக் கொண்டிருந்த பாம்பு, மனிதனைப் போலப் பேசத் தொடங்கியது. ''அர்ச்சு னகா! நீ இதுவரை கூறியதைக் கேட் டேன். என்னிடம் என்ன குற்றம் இருக் கிறது? கௌதமியின் மகனைத் தீண்டிய தனுல் எனக்கு ஏதாவது நன்மை உண்டா? அல்லது என் உணவுக்காக அவனைத் தீண்டினேனு? அவனைத் தீண்டியதனுல் என் பசி அடங்கிவிடுமா? நான் யமனு டைய ஏவலினுல் அவனைத் தீண்டினேனே யன்றி வேறில்லை. எனவே இவனைத் தீண்டின குற்றம் யமனைச் சேர்ந்ததே. நான் குற்றவாளியல்ல. குற்றமற்ற என்னைக் கொல்வது தர்மமாகாது'' என்று கூறியது.

வேடன், ''விஷப் பாம்பே! இந்தப் பாலகனைக் கொல்வதற்கு யமன் காரண மானுலும், நீயும் யமனுடைய ஏவலைக் கேட்டு இவனது உயிர் போவதற்குத் துணைக் காரணமாவாய். உன் மீதும் குற்றம் இருக்கிறது'' என்ருன்.

**நாகம் :**—வேடனே! அப்படியானுல் நான் மட்டும் குற்றம் செய்யவில்லையே? யமனும் இந்தக் குற்றத்திற்கு உரியவன் தானே? யமனை விட்டு என்னை மட்டும் தண்டிப்பது என்ன நீதி?

**அர்ச்சுனகன் :**— அரவமே! கௌதமி யின் மகனை நீ தீண்டாதிருந்தால் அவன் மாண்டிருக்க முடியாது. யமன் ஏவி னுலும் நீ தீண்டாதிருக்கலாமே? ஆகை

யால் நீயும் குற்றவாளியே. குற்றம் செய்தவனைத் தண்டிப்பதே தர்மமாகும். உன் உயிர் போகப் போகும் இந்த நேரத்தில் நீ இப்போது வீணாகப் பேசிக் கொண்டிருக்கிறாய்'' என்றான்.

பாம்பு, ''வேடர் தலைவனே! ஒரு யாகத்தில் ஹோமம் செய்யும் ருத்விக்குகள் அந்த யாகத்தின் பலனை அடைய மாட்டார்கள். அது போல, இந்தக் கௌதமியின் மகனைக் கொன்ற குற்றம் என்னைச் சேராது; யமனையே சேரும்'' என்றது.

## 4

அந்தச் சமயத்தில் யமன் அங்கே வந்து சர்ப்பத்தை நோக்கிச் சொல்லத் தொடங்கினான்—''சர்ப்பமே! நானும் காலத்தினால் ஏவப்பட்டே உன்னை ஏவினேன். என் உரிமையாலோ விருப்பத்தாலோ உன்னை ஏவவில்லை. எனவே இவன் மரணத்திற்கு நானும் காரணமாகேன்; நீயும் காரணமல்ல. ஆக்கலும் அழித்தலும் காலத்தினால் நிகழ்வதேயன்றி என்னை நீ எப்படிக் குற்றவாளியாக்குகிறாய்? காலத்தின் மேலுள்ள குற்றத்தை நீ என் மேல் சுமத்துகிறாயே? இவன் உயிரிழந்ததற்குக் காலத்தின் மீதே குற்றம்'' என்றான்.

பாம்பு, ''காலத்தின் மேல் குற்றம் இருந்தாலும் என்னை ஏவினது நீர்தாமே? குற்றவாளியாகிய உம்மை விட்டு இந்த வேடன் என்னைத் தண்டிக்க நினைக்கிறானே!'' என்று சொல்லி, வேடனை நோக்கி, ''வேடனே! நீ யமதர்மர் சொன்னதைக் கேட்டாய் அல்லவா? இனி நீ குற்றவாளியாகிய யமனையே தண்டிக்க வேண்டும்'' என்று கூறியது.

**அர்ச்சுனகன் :**—அரவமே! நீ சொன்னதையும் யமதர்மர் சொன்னதையும் கேட்டேன். இதனால் உன்னிடத்தில் குற்றமில்லை என்பதில்லை. நீயும் யமனுமே இந்த அன்னையின் குமாரன் இறந்ததற்குக் காரணம். கௌதமியின் துயரத்திற்குக் காரணமான யமனை மிகவும் வெறுக்கிறேன். உன்னையும் கொல்லப் போகிறேன்.

**யமன் :**—அர்ச்சுனகா! நீ ஆராயாமல் பேசுகிறாய். எனக்கும் சர்ப்பத்திற்கும் எந்த ஒரு சுதந்திரமும் கிடையாது. நாங்கள் விதித்தவற்றைச் செய்கிறவர்கள்; காலத்திற்கு உட்பட்டவர்கள்.

**வேடன் :**—யமதர்மரே! குற்றம் செய்தவர்கள் தப்பித்துக் கொள்வதற்குச் சொல்லும் சமாதானம் இது. நீங்கள் இருவருமே குற்றவாளிகள்தாம்.

## 5

அப்பொழுது காலதேவன் அங்கு வந்து அர்ச்சுனகனைப் பார்த்து, ''வேடனே! இந்தக் குழந்தை இறந்ததற்கு நானும் யமனும் பாம்பும் காரணமல்ல. இந்தக் குழந்தையின் கர்மமே காரணமாகும். உலகிலுள்ளோர் அனைவரும் கர்மவசப்பட்டவரே. இந்தக் குழந்தையின் கர்மம் என்னை ஏவ, நானும் முறையே மற்றவர்களை ஏவினேன். எனவே நாங்கள் யாரும் குற்றவாளிகள் இல்லை'' என்றான்.

இவை அனைத்தையும் கேட்டுக்கொண்டிருந்த கௌதமி, வேடனை நோக்கி, ''வேடனே! இவர்கள் ஒவ்வொருவர் சொன்னதையும் நீ கேட்டாய் அல்லவா? என் மகன் தன் ஊழ்வினையால் உயிர் நீத்தான். நானும் வயது முதிர்ந்த காலத்தில் என் மகனைப் பிரிவதற்கு உரிய வினையைச் செய்திருக்கிறேன். வினைகளின் பலனை ஒவ்வொருவரும் அனுபவித்தே தீர வேண்டும். ஆதலால் நீ இந்தப் பாம்பை விட்டுவிடு'' என்றாள்.

வேடன் அவ்விதமே செய்தான். மற்றவர்கள் தத்தம் இருப்பிடம் சேர்ந்தனர்.

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

தர்மநந்தன! இந்த வரலாற்றிலே, எல்லாம் ஊழ்வசத்தால் நடக்கின்றன என்பது தெரிகிறது அல்லவா? இதிலிருந்து, நம்மால் ஆவது ஒன்றுமில்லை என்று உணர்ந்துகொள். எல்லாம் தெய்வத்தின் எண்ணப்படிதான் நடக்கும். இதையே தெய்வ சங்கல்பம் என்கிறோம். அவரவர் செய்த வினைப் பலன்களை அவரவர்கள் அனுபவித்தே தீரவேண்டும். ஆகவே என் பிரிவுக்காக நீ வருந்தாதே என்று பீஷ்மர் கூறியதைப் பாரதத்தில் காண்கிறோம்.



திருநீறு என்றதும் அது நிலையாமையைக் குறிக்கிறது என்று மட்டும் நினைக்கிறோம் அது தவிரவும் தெரிந்துகொள்ள வேண்டியவை எவ்வளவோ உண்டு.



# திருநீற்றின் மகிமை

ராஜம் ஜயராமன்

**பல பெயர்கள்**

விபூதி என்பதற்கு மேலான ஐசுவரியம் (செல்வம்) என்று பொருள். வி-மேலான, பூதி-ஐசுவரியம். இங்கு மேலான ஐசுவரியம் என்பது முக்திப் பேற்றையே குறிப்பிடும்.

எனவே, அனைத்திற்கும் மேலான முக்தியை அளிக்க வல்லது ஆதலால் இது விபூதி எனப்பட்டது. விபூதி, நீறு, பஸ்மம் (பற்பம்), பசிதம், சாரம், ரக்ஷை என்ற பல பெயர்கள் திருநீற்றுக்கு உண்டு.

பாவங்களை எல்லாம் அழித்து நீருக்குவதனால் நீறு, பஸ்மம், பற்பம் என்று விபூதி சொல்லப்படுகிறது.

அறியாமை அழியும்படி சிவஞானமாகிய சிவதத்துவத்தை விளக்குவதனால் இதற்குப் பசிதம் என்று பெயர். உயிர்களின் மலத்தை நீக்குவதனால் சாரம் என்று பெயர். ஆன்மாக்களைத் துன்பங்களிலிருந்து காப்பதனால் ரக்ஷை (காப்பு) என்று பெயர்.

முறைப்படி மந்திரங்களை உச்சரித்துப் பசுவின் சாணத்தை எரித்துத் திருநீறு தயாரிக்கப்படுகிறது.

**விபூதி தோன்றிய விதம்**

ஆணவ மலத்தை நீக்கி அருளும் வேதியர் சிவபெருமான். அவர் திருவருளாகிய உமாதேவியார் பத்தினியாகவும், பிரளய வெள்ளத்தையே நீராகவும், அண்டங்களையே மண்டபங்களாகவும், பூவுலகமே வேதிகையாகவும், அரி பிரமன் இந்திரன் முதலிய தேவர்கள் யாவரும் அவியாகவும், ஏனைய உயிர்களைப் பசுக்களாகவும் கொண்டு, தமது நெற்றியாகிய குண்டத்தில் அக்கினிக் கண்ணில் அக்கினியை மூட்டி யாகம் செய்தருளினர். அந்த யாகத்தில் தோன்றிய வெண் நீற்றைத் தமது திருமேனியில் பரவப் பூசி விளங்கினர். இந்தத் திருநீற்றை அகங்காரம் மமகாரம் எனப்படும் அகப் புறப் பற்றுகள் அழியும்படி மூவகை ஆன்மாக்களான விஞ்ஞான கலர், பிரளய கலர், சகலர் முதலியோரைத் தத்தம் சரீரத்தில் சிவபெருமான் தரிக்கச் செய்தார் என்று தணிகைப் புராணம் குறிப்பிடுகிறது.

**விபூதி வகை**

திருநீறு நான்கு வகைப்படும். அவை முறையே கற்பம், அநுகற்பம், உப கற்பம், அகற்பம் எனப்படும்.

வியாதியில்லாத கன்றுடன் கூடிய பசுவின் சாணத்தைப் பூமியில் விழாமல் தாமரையிலையில் ஏற்றுப் பால் தயிர் நெய் கோமயம் ஆகியவை சேர்த்து மந்திரங்களைச் சொல்லி, சிவாக்கினியில் எரித்து எடுப்பது கற்ப விபூதி எனப்படும்.

காடுகளில் கிடைக்கும் பசுஞ்சாணங்களைச் சேகரித்து மந்திரங்களைக் கூறிச் சிவாக்கினியில் தகித்துத் தயாரிப்பது அநுகற்ப விபூதி எனப்படும்.

மாட்டுத் தொழுவங்களிலும், மாடுகள் இருக்கும் இடங்களிலும் கிடைக்கும் சாணத்தைக் காட்டுத்தீயில் எரித்து, மீண்டும் அதைச் சிவாக்கினியில் எரித்து எடுப்பது உபகற்ப விபூதி எனப்படும்.

மந்திரம் இல்லாமல் எல்லோராலும் சேகரிக்கப்பட்ட சாணத்தைச் சுள்ளி களினால் எரித்து எடுப்பது அகற்ப விபூதி எனப்படும்.

**விபூதி வைக்கும் விதி**

மேலே சொல்லப்பட்ட நான்கு வகையான விபூதிகளைப் பரிசுத்தமான வஸ்திரத்தில் வஸ்திரகாயம் செய்து, புதுப் பாண்டத்தில் வைத்து, விபூதி காயத்ரி மந்திரத்தை உச்சரித்து, அதனுள் மல்லிகை முல்லை பாதிரி சிறுசண்பகம் துளசி கதிர்ப்பச்சை ஆகிய மலர்களைக் கலந்து, சத்யோஜாத மந்திரத்தைக் கூறி வைக்க வேண்டும்.

**விபூதிதாரண வகை**

ஸ்நானம், திரிபுண்ட்ரம், உத்தூளனம் என்ற மூன்று விதங்களில் விபூதி தரிக்கப்படுகிறது.

உடல் முழுவதும் விபூதி பூசிக்கொள்வது விபூதி ஸ்நானம் ஆகும். தண்ணீரில் குளிக்க முடியாதபோதும், தண்ணீரில் குற்றம் நேர்ந்த காலத்திலும் விபூதிஸ்நானம் மேற்கொள்ளப்படும். இதை, 'ஆக்நேயம் பஸ்மஸ்நானம்' என்று வேதம் கூறுகிறது.

விபூதியை மூன்று குறியாகத் தரிப்பது திரிபுண்ட்ரம் என்று சொல்லப் படுகிறது. திரி-மூன்று, புண்ட்ரம் குறி.

நீரில் குழைக்காமல் அணிவது உத்தூளனம் எனப்படுகிறது.

**விபூதி அணியும் அளவும் இடங்களும்**

நெற்றியில் கடைப்புருவ எல்லை நீளமும், மார்பிலும் புஜங்களிலும் ஆறங்குல நீளமும், மற்ற இடங்களில் ஒவ்வோர் அங்குல நீளமும் விபூதியைத் தரிக்க வேண்டும். விபூதிக் கோடுகள் ஒன்றை ஒன்று தீண்டினாலும், மிகவும் அகன்று இருந்

---

**இறைவனும் மனிதனும்**



முடிந்ததை நினைப்பவன் மனிதன். நினைப்பதை முடிப்பவன் இறைவன்.

தன்னை அடக்கி ஆளாதவனின் உள்ளம் எப்போதும் போர்க்களமாய்த் திகழும்.

சிந்தனை குறையக் குறைய, பேச்சு அதிகமாக இருக்கும்.

மனிதனைப் பிறர் ஏமாற்றுவதைவிட அவன் தன்னைத் தானே ஏமாற்றிக்கொள்வதுதான் அதிகம்.

ஞானம் பெற்ற எவனும் பதற்றம் அடையும் நிலையில் இருப்பதில்லை. மன அமைதி நிலையே ஞானம் என்று அழைக்கப்படுகிறது.

—லாவேட்டர்

தாலும். வளைந்து இருந்தாலும், இடைவெளி இல்லாமலிருந்தாலும் குற்றமாகக் கருதப்படும். விதிக்கப்பட்ட அளவுக்கு விபூதியின் கோடுகள் குறைந்தால் ஆயுள் குறையும் என்றும், கூடினல் தவம் கெடும் என்றும் சொல்லப்படுகிறது. மூன்று குறிகளின் இடைவெளி ஒவ்வோர் அங்குலம் அளவு கொண்டதாக இருக்க வேண்டும்.

உச்சி, நெற்றி, கழுத்து, மார்பு, நாபி, முழந்தாள்கள் இரண்டு, தோள்கள் இரண்டு, முழங்கைகள் இரண்டு, மணிக்கட்டுகள் இரண்டு, விலாப்புறம் இரண்டு, முதுகு ஆகிய பதினாறு இடங்களில் விபூதியைத் தரிக்க வேண்டும் என்று ஆன்றோர் விதித்துள்ளனர். விலாப்புறம் இரண்டை நீக்கி, செவிகள் இரண்டையும் விபூதி யைத் தரிக்கும் இடங்களாகச் சேர்த்துக்கொள்வதும் உண்டு. மேலும், பன்னி ரண்டு, எட்டு இடங்களில் விபூதியைத் தரிக்க வேண்டும் என்றும் சொல்வது உண்டு.

**விபூதி வாங்கும் விதி**

ஆசாரியர் அல்லது சிவனடியார் விபூதி கொடுக்கும்போது அவர்களை விழுந்து வணங்கி எழுந்து கைகூப்பி இரண்டு கைகளாலும் விபூதியை வாங்கி அணிய வேண்டும். அதன் பின்பு விபூதி கொடுத்தவரை முன்பு போலவே மீண்டும் எழுந்து வணங்குவது முறை. குதிரை, சிவிகை, ஆசனம், அம்பலம், திண்ணை முதலியவற்றில் இருந்துகொண்டு விபூதியை வாங்குவது கூடாது. விபூதி கொடுப் பவர் கீழே நிற்க, வாங்குபவர் மேலிருந்தும் வாங்குவது கூடாது. சிவபக்தி இல்லாதவர்களிடமும் திருநீற்றை வாங்கக் கூடாது.

**தரிக்கக் கூடாதவை**

ஒரு கையால் வாங்கிய விபூதி, சிவதீட்சை பெறாதவர் கொடுத்த விபூதி, கருநிறம், செந்நிறம், புகைநிறம், பொன்னிறம் உடைய விபூதிகள் ஆகியவற்றைத் தரிப்பது கூடாது.

**உட்கொள்ளும் மருந்து**

மருந்தாகவும் உட்கொள்ளும் மேன்மை விபூதிக்கு உண்டு. உட்கொள்ளும் விபூதி தேக அசுத்தங்களைப் போக்கி, 72,000 நாடிகளுக்கும் வலிமையை உண்டாக்கு கிறது என்று பெரியோர் கூறுவர்.

## சந்தாதாரர்கள் கவனிக்க

* சந்தா எண் 80,001 முதல் 80,292 வரையிலும் உள்ள அன்பர்களின் சந்தாத் தொகை ஜூலை மாதத்துடன் முடிவடைகிறது. பத்திரிகையைத் தொடர்ந்து அனுப்ப, அடுத்த ஆண்டுச் சந்தாத் தொகை ரூ.15ஐ ஜூலை 25-ஆம் தேதிக்குள் அனுப்பி வைக்குமாறு கேட்டுக் கொள்ளுகிறோம்.

* சந்தா எண் 90,001 முதல் 90,685 வரையிலும் உள்ள அன்பர்களின் சந்தாத் தொகை ஆகஸ்ட் மாதத்துடன் முடிவடைகிறது.

* சந்தா எண் 1,00,005 முதல் 1,00,436 வரையிலும் உள்ள அன்பர்களின் சந்தாத் தொகை செப்டம்பர் மாதத்துடன் முடிவடைகிறது.

* சந்தா எண் 1,10,001 முதல் 1,10,745 வரையிலும் உள்ள அன்பர்களின் சந்தாத்தொகை அக்டோபர் மாதத்துடன் முடிவடைகிறது.

சந்தாவைக் கூடிய விரைவில் முன்னதாகவே செலுத்துவதனால் பல சங்கடங்களையும் குழப்பங்களையும் தவிர்க்க முடிகிறது.

# நூல் அறிமுகம்

**1. மன அமைதிக்குப் பக்திமுறைகள்**
பக்கம் 164—ரூ. 8

**2. இணையில்லாத இந்துமதம்**
பக்கம் 103—ரூ. 5

**3. அற்புதமான இந்துமதம் 1000 உண்மைகள்**
பக்கம் 228—ரூ. 12

**4. இந்துமத தத்துவங்கள்**
பக்கம் 128—ரூ. 7

மேலே குறிப்பிட்ட நான்கு நூல்களையும் 'எழுதியவர்: திருமருகல் சிங்காரவேலனர்

**5. இந்திய ஆலயங்கள்-முதல் பாகம்**
புனித பாரதம், தென்னிந்தியக் கோயில்கள், பாடல் பெற்ற சிவாலயங்கள், பாடல்பெருத சிவாலயங்கள் ஆகிய நான்கு அத்தியாயங்களைக் கொண்ட நூல். பக்கம் 204—ரூ. 10

**6. இந்திய ஆலயங்கள்-இரண்டாம் பாகம்**
சக்தி ஆலயங்கள், சென்னை ஆலயங்கள், முருகன் கோயில்கள், விஷ்ணு ஆலயங்கள், மங்களாசாசனம் பெருத ஆலயங்கள், வட இந்தியக் கோயில்கள், பாடல் பெற்ற சிவாலயங்கள், மங்களாசாசனம் பெற்ற விஷ்ணு ஆலயங்கள், பிற ஆலயங்கள் ஆகிய எட்டு அத்தியாயங்கள் கொண்ட நூல்.
பக்கம் 159—ரூ.10

மேலே குறிப்பிட்ட இரண்டு நூல்களையும் எழுதியவர் : சி. முத்துப்பிள்ளை.

மேற்கூறிய ஆறு நூல்களையும் வெளியிட்டோர்: அருணோதயம், 3, கௌடிய மடம் சாலை, இராயப்பேட்டை, சென்னை 600 014.

**7. சக்திமஹிம்ன: ஸ்தோத்ரம்**
துர்வாச மகரிஷி எழுதிய நூல், இந்த நூலில் அனுபந்தமாக, பாவன உபநிஷதம் ப்ரயோக மஹாயாகக் கிரமம் சேர்க்கப்பட்டுள்ளது. நாகரத்திலும் தமிழிலும் அச்சிடப்பட்டுத் தமிழில் பதவுரையும் குறிப்புரையும் தரப்பட்டுள்ளன. பக்கம் 120—ரூ. 2

உரை ஆசிரியர் : அண்ணா

சநாதனதர்ம வித்யாசமிதி, 'நவஸுஜா', ராஜா அண்ணாமலைபுரம், சென்னை—600 028.

**8. ஸ்ரீவரிவஸ்யா ரஹஸ்யம்**
ஸ்ரீவித்யா உபாசனையின் ரகசியங்களை இந்த நூலில் பாஸ்கரராயர் விளக்கியுள்ளார். பக்கம் 135—ரூ. 5

உரையாசிரியர் : அண்ணா

கணேஷ்&கம்பெனி, சென்னை-600017.

**9. ஸ்ரீராம சரித மானஸ்**
ஒரே ஒரு செய்யுளும் விட்டுப் போகாமல் துளசி ராமாயணம் முழுமையாக மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. வியாபார நோக்கமின்றி ஒரு தெய்வத் தொண்டாக மலிவு விலையில் இந்த நூலை வெளியிட்டிருக்கிறார்கள். மொழிபெயர்ப்பு மூலத்திலிருந்து பிறழாமல் இருப்பதில் விசேஷ கவனம் செலுத்தியுள்ளனர். பக்கம் 886—ரூ. 24

தமிழாக்கம்: சிவராமகிருஷ்ணன்

ஸாதனா நிகேதன், கீழ்க்கொட்டையூர், கும்பகோணம், பின் கோட்—612 002.

**10. கண்ணன் தீராத விளையாட்டுப் பிள்ளை**
பூதனையின் புனித முடிவு—ஓர் தத்துவ விளக்கம். பக்கம் 27—ரூ. 2

**11. ஸ்ரீ ஆதிசக்தி மஹாலக்ஷ்மி ஏகபஞ்சாசத் வர்ணமாலா நாமாவளி**
பக்கம்40—ரூ. 5

மேற்கண்ட இரண்டு நூல்களுக்கும் ஆசிரியர் : ஸ்ரீதாஸ்

கீதாச்ரமம், 51—52, ஸௌராட்டிர பெரிய தெரு, கும்பகோணம்—612 001.

# இரண்டு கிளிகள்

அ. லெ. நடராஜன்



ஒரு மலைச்சாரலில் பெண்கிளி ஒன்று வசித்து வந்தது. அதற்கு இரண்டு குஞ்சுகள் இருந்தன. ஒரு நாள் இரை தேடும்பொருட்டுத் தாய்க் கிளி வெளியே போயிருந்தது.

அப்போது அங்கு வந்த வேடன் ஒருவன், கிளிக் குஞ்சுகள் இரண்டையும் கூடையில் வைத்து எடுத்துப் போனான். அவற்றுள், விதியின் விளைவால் ஒரு குஞ்சு கூடையிலிருந்து தவறிக் கீழே வழியில் விழுந்துவிட்டது. அதை வேடன் கவனிக்கவில்லை.

வழியில் கிடந்த கிளிக் குஞ்சை ஒரு முனிவர் எடுத்துப் போய் ஆசிர மத்தில் வைத்து வளர்த்தார்.

வேடனும் தன்னிடம் இருந்த மற்றொரு குஞ்சைத் தன் வீட்டுக் குடிசையில் வைத்து வளர்த்தான்.

இது நடந்து சில காலத்துக்குப் பிறகு அரசன் ஒருவன் அந்தக் காட்டுக்குக் குதிரைமீது வந்தான். கட்டுக்கு அடங்காமல் திசைகெட்டு ஓடியது குதிரை. அதனால் தன் பரிவாரத்தை விட்டுப் பிரிந்து அரசன் எங்கேயோ வந்துவிட்டான். அவன் வந்த இடத்தில் வேடன் வாழும் குடிசை இருந்தது.

குதிரைமீது ஒருவன் வருவதை வேடன் வளர்த்த கிளி கவனித்து விட்டது. "ஐயா! யாரோ ஒரு மனிதன் குதிரைமீது வருகிறான். அவனைப் பிடித்துக் கட்டுங்கள்; கொல்லுங்கள்; அடியுங்கள்" என்று உரத்த குரலில் கூவியது.

இதைச் செவி மடுத்த அரசன் பயந்து போனான்; குதிரையை வேகமாக வேறு ஒரு பக்கம் தட்டிவிட்டான். அது முனிவர் வாழும் ஆசிரமத்துக்குப் போய்ச் சேர்ந்தது.

கூண்டிலிருந்தபடியே அந்தக் கிளி அரசன் வருவதைக் கவனித்து விட்டது. "அரசே! வாருங்கள், வாருங்கள்; தங்களுக்கு நல்வரவு; தயவு செய்து இந்த ஆசிரமத்தில் தங்கி இளைப்பாறுங்கள்; குளிர்ந்த நீரைப் பருகுங்கள்; சுவையுள்ள பழங்களைச் சாப்பிடுங்கள்! முனிவர்களே! அரசரை உபசரிப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யுங்கள். பாதங் களைக் கழுவிக்கொள்ள நீர் கொடுங்கள். மர நிழலில் இளைப்பாற ஏற்பாடு



செய்யுங்கள். வேண்டிய பணிவிடைகளைச் செய்யுங்கள்'' என்று உரக்கக் கூறியது.

இதைப் பார்த்ததும் அரசன் அளவற்ற ஆச்சரியம் அடைந்தான். "இந்த இரண்டு கிளிகளுக்குமிடையே இத்தகைய வேறுபாடு இருக்கக் காரணம் என்ன?'' என்று சிந்தித்தான்.

அவன் கிளியைப் பார்த்து, "இதே காட்டில் வேறு ஒரு கிளியைப் பார்த்தேன். என்னைப் பார்த்ததும் 'குத்து, வெட்டு, கொல்லு' என்று அது கூறிற்று. அது அப்படிப் பேசக் காரணம் என்ன?'' என்று கேட்டான்.

தங்கள் வரலாற்றைக் கிளி அரசனுக்கு எடுத்துக் கூறிற்று; "அரசே! நாங்கள் இருவரும் ஒரே தாய்வயிற்றில் பிறந்தவர்கள். என்னை முனிவர்கள் வளர்த்தனர். என் தம்பியை வேடர்கள் வளர்த்தனர். எங்கள் வளர்ப்பும் பயிற்சியுமே இந்த வேறுபாட்டுக்குக் காரணம்'' என்று விளக்கியது கிளி.

பழக்க வழக்கங்களினாலும் சேர்க்கையினாலும் ஒருவனுக்குக் குணங்கள் ஏற்படுகின்றனவேயன்றி, பிறப்பினாலோ பரம்பரைப் பெருமையினாலோ அன்று என்பதை, நாம் மேலே பார்த்த இந்தப் பஞ்சதந்திரக் கதை விளக்குகிறது. ★

# ஆன்மிக வினா விடை

## சுவாமி கமலாத்மானந்தர்

திருமதி ராஜேசுவரி, தாம்பரம்

கேள்வி: திருப்பாற்கடல் எது ?

பதில்: திருப்பாற்கடல் பூவுலகில் இல்லை. அது யோகிகள் காணும் தேவ உலகில் உள்ளது. ஊனக் கண்ணால் காண்பதன்று; ஞானக்கண்ணால் காண்பது.

ஜே.என். ஸ்ரீனிவாசன், புதுதில்லி

கேள்வி: நல்லவனாக இருந்தும் ஒருவன் வாழ்க்கையில் பலவித இன்னல்களுக்கு ஆளாகிறான். கொடியவனாக இருந்தும் மற்றொருவன் நிறைந்த வசதிகளோடு வாழ்கிறான். இதற்கு ஊழ்வினைதான் காரணம் என்று சொல்லாமல்வேறு வகையில் பதில் சொல்லுங்கள்.

பதில்: கேள்விக்கு உரிய பதிலைத்தான் சொல்ல முடியும். அந்த வகையில் ஊழ்வினை என்பதைத் தவிர வேறு வகையில் பதில் சொல்வதற்கில்லை. இருக்கும் உண்மை எதுவோ அதைத்தானே சொல்ல முடியும்?

A. சேகர். திருச்சி-8

கேள்வி: பில்லி, சூன்யம், மந்திரம் இவையெல்லாம் உண்மையா? பொய்யா? இவையெல்லாம் நடக்குமா?

எங்கள் உறவினர் வீட்டில் நன்கு ஆரோக்கியமாக இருந்த ஒருவர் திடீரென்று அடிக்கடி நோய்க்கு ஆளாவதும் பயந்து அலறுவதுமாகவும் இருந்தார். ஒரு நாள் வயதான உறவுக்காரப் பெண்மணி ஒருவர் அங்கே வந்தார். அந்தப் பெண்மணி சாமி வந்து ஆடி, ஒரு குறிப்பிட்ட இடத்தில் தரையைத் தோண்டிப் பார்க்கச் சொன்னார். தோண்டிப் பார்த்தபோது அங்கே பயந்தவரின் பெயர் பொறித்த தகடு இருந்ததாம். இதை என் உறவினர் சொல்லக் கேட்டிருக்கிறேன். தாங்கள் இதைப் பற்றிச் சொல்ல வேண்டும்,

பதில்: நம் கண்ணுக்குப் புலனாகாத நல்ல சக்திகள் உலகில் இருப்பது போலவே, நம் கண்ணுக்குப் புலனாகாத தீய சக்திகளும் இருக்கின்றன. அதற்குத் தாங்கள் குறிப்பிட்டிருக்கும் உதாரணமே சான்று.

நீங்கள் நம்பினாலும் நம்பாவிட்டாலும் அவை உலகில் இல்லாமல் போகவில்லை. ஆனால் அத்தகைய நிகழ்ச்சிகளுக்கு உரிய காரிய காரணத் தொடர்பு, நம்முடைய அளவுக்கு உட்பட்ட அறிவுக்கு விளங்கவில்லை.

பில்லி, சூன்யம், மந்திரம் ஆகியவற்றில் ஒரு சிறிது உண்மை இருக்கிறது. ஆனால் அத்தகைய ஆராய்ச்சிகள் கடவுளை அடைய விரும்பும் ஆத்ம சாதகனுக்கு அவசியம் இல்லாதவை.

பில்லி, சூன்யங்களை ஆராய்வதை விடக் கடவுளைத் தியானிப்பதும் அவருடைய திருநாமத்தை ஜபிப்பதும் அனுபூதிமான்களால் அருளப்பெற்ற

சாஸ்திரங்களைப் படிப்பதும் ஒரு சாதகனுக்கு மிகுந்த நன்மையைக் கொடுக்கும். பின்னால் சொல்லப்பட்ட இவற்றில் ஈடுபடுவதுதான் வாழும் வழி என்று சான்றோர்கள் கருதுகிறார்கள்.

''பேய் பிசாசு என்று நீ அவற்றைப் பற்றியே நினைத்துக்கொண்டிருந்தால் நீயும் பேய் பிசாசு ஆகிவிடுவாய். அதற்கு மாறாக நீ கடவுளைப் பற்றி நினைத்தால் நீயும் கடவுளாகவே ஆகிவிடுவாய்'' என்று ஸ்ரீராமகிருஷ்ணர் தமது சீடர் நிரஞ்ஜனிடம் ஒரு சமயம் குறிப்பிட்டார்.

செல்வரத்தினம், பாளையங்கோட்டை

**கேள்வி:** ஊழ்வினை என்பது உண்மையா? அல்லது அப்படிச் சொன்னால்தான் மக்கள் நல்லபடியாக நடப்பார்கள் என்பதானால் சொல்லப்பட்ட கருத்தா?

**பதில்:** ஊழ்வினை என்பது முன்பு செய்த கர்மத்தின் (செயலின்) பயனாக எழும் வேகம். குடித்துப் பழகியவனை மீண்டும் மீண்டும் குடிக்கச் செய்வது ஊழ்வினைதான்.

முந்தைய கர்மம் இந்தப் பிறவியில் செய்ததாகவும் இருக்கலாம். முந்தைய பிறவிகளில் செய்ததாகவும் இருக்கலாம்.

சிலர் பிறக்கும்போதே மேதாவிகளாக இருக்கிறார்கள். சிலர் பிறக்கும்போதே தீயவர்களாக இருக்கிறார்கள். அதற்கெல்லாம் காரணம் ஊழ்வினைதான்.

உதாரணமாக, சாதாரண அல்லது தாழ்ந்த குடும்பத்தில் பிறக்கும் ஒருவனிடம் அசாதாரணமான பண்புகளும் திறமைகளும் வெளிப்படுகின்றன. பண்புமிக்க உயர்ந்த குடும்பத்தில் பிறந்திருந்தும் ஒருவன் இழிந்த இயல்புகளைக் கொண்டவனாக இருக்கிறான்—இவற்றை ஊழ்வினை என்று சொல்வதைத் தவிர வேறு எந்த விதத்தில் விளக்க முடியும்?

இந்துமதம், பௌத்தம், சமணம் ஆகியவை ஊழ்வினை பற்றிய கருத்தை ஏற்றுக்கொண்டுள்ளன.

இந்தப் பிறவியில் ஒருவன் செய்யும் நல்வினை, தீவினைகளுக்கு ஏற்பவே அவனுக்கு மறுமை அமையும் என்பதைக் கிறிஸ்தவம் இஸ்லாம் உட்பட எல்லாச் சமயங்களும் ஏற்றுக்கொண்டுள்ளன.

வி. ராமமூர்த்தி, திருவள்ளூர்

**கேள்வி:** பெண்கள் சந்நியாசம் மேற்கொள்ளக் கூடாது என்று இந்துமதம் கூறுவதாகச் சங்கர மடத்தினர் கூறுகிறார்கள். அவ்விதமானால் ராமகிருஷ்ண மடம் இந்துமதத்திற்கு எதிராகச் செயற்படுவதாக ஆகிறது. இதற்குத் தாங்கள் கூறும் விளக்கம் யாது?

**பதில்:** சந்நியாச ஆசிரமத்திற்கு விதிக்கப்பட்ட கடமைகளை முற்றும் கைக்கொள்வதில் பெண்களுக்கு இயற்கையாகவே உடற்கூற்றில் சில குறைபாடுகளும் தடைகளும் இருக்கின்றன.

அவர்கள் எங்கு வேண்டுமானாலும் ஆண்துறவிகளைப் போல் தனியாகச் சஞ்சரிப்பதிலும் சிக்கல்கள் உண்டு. அதனால்தான் அவர்கள் சந்நியாசத்தைப் பண்டைய இந்துமதக் கோட்பாடுகள் அங்கீகரிக்கவில்லை.

மடம் போன்ற இடங்களில் மற்றப் பெண்களுடன் துறவிகளாகப் பெண்கள் தகுந்த பாதுகாப்புடன் வாழ்வதைப் புத்தமதம் அங்கீகரித்தது. அதுபோல், பரந்த நோக்குக் கொண்ட ராமகிருஷ்ணருடைய புதிய இந்துமதம் பெண்களுக்குத் தகுந்த பாதுகாப்புடன் சந்நியாசத்தை ஏற்றுக்கொண்டுள்ளது.

என். சுப்பிரமணியன், திருச்சி-14

**கேள்வி:** ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் காலை அல்லது மாலையில் 'ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம்' பாராயணம் செய்து பூஜை செய்து வருகிறேன். சில நாட்களுக்கு முன்பு நான் சந்தித்த

பெரியவர் ஒருவர், ''ஸ்ரீலலிதா ஸஹஸ்ர நாமத்தை, குரு மூலம் உபதேசம் பெற்றுத்தான் பாராயணமோ பூஜையோ செய்ய வேண்டும். இல்லை என்றால் சக்தி எதிர்த் தாக்குதலைத் தருவாள்'' என்று கூறினார். நான் உபதேசம் எதுவும் பெற வில்லை. ஆகவே மேற்கொண்டு நான் ஸ்ரீலலிதா பூஜை செய்ய லாமா வேண்டாமா என்று புரியாமல் குழம்புகிறேன். தாங்கள் இது சம்பந்தமான எனது சந்தேகத்தை நிவர்த்தி செய்ய வேண்டுகிறேன்.

பதில்: லலிதா ஸஹஸ்ரநாம பாராயணத்தைத் தொடர்ந்து செய்து பூஜை செய்ய 'ஸ்ரீவித்யா' பாலா மந்திரமோ 'பஞ்சதசாக்ஷரி' மந்திரமோ அதை ஏற் கனவே உபதேசம் பெற்றுள்ள ஒருவரிடமிருந்து பெற்றுக்கொள்வது முறையாகும்.

உபதேசம் பெற்றுச் செய்வது, ஏற்கனவே வெட்டிய வாய்க்கால் வழியாகத் தண்ணீர் கொண்டு வருவதைப் போன்று விரைவில் பலனைக் கிடைக்கச் செய்யும். முறைப்படி உபதேசம் பெறாமல் செய்வது, நாமாகப் புதிய வாய்க்கால் வெட்டுவது போன்றது.

''மனம் கசிந்த பிரார்த்தனை, ஆழ்ந்த பக்தி, தீவிரமான மனம் இவற்றுடன் எவன் ஈசுவரனிடம் போக முடியுமோ அவனுக்குக் குரு வேண்டியதில்லை. ஆனால் இவ்விதம் அருள்தாகம் உடையவர் அருமை யிலும் அருமை. ஆதலால்தான் குரு அவசியம் வேண்டியிருக்கிறது'' என்று ஸ்ரீராமகிருஷ்ணர் குறிப்பிட்டுள்ளார்.

ஆத்மசாதகன் உண்மையான பக்தியும் நம்பிக் கையும் கொண்டு தெய்வத்தை வழிபட்டால், குரு தாமே வந்து சேருவார்—இந்த உண்மைக்கு ஸ்ரீராமகிருஷ்ணரின் வாழ்க்கை எடுத்துக்காட்டு.

குருமூலம் உபதேசம் கிடைக்கும் வரையில் தாங்கள் இப்போது செய்து வருவது போலவே பக்தியுடன் செய்து வாருங்கள்.

உண்மையான ஆன்மிக மனநிலைதான் மகவும் முக்கியம். முறைப்படி உபதேசம் பெறாததைக் குறித்தோ, விதிப்படி செய்யாததைக் குறித்தோ மக்கள் வேண்டுமானால் தவறாக நினைக்கலாம், சொல்லலாம். ஆனால் கடவுள் ஒருபோதும் தவறாக நினைக்கவே மாட்டார்.

ஆன்மிக முன்னேற்றம் என்ற தூய நோக் கத்தில் பக்தர் செய்பவை விதிப்படி அமையாவிட் டாலும், அவை தம்மைக் குறித்துச் செய்யப்படு பவையே என்பதை அம்பிகை நன்கு அறிவாள்.

ஸ்ரீராமகிருஷ்ணர் கூறுகிறார்—''இறைவனை அறிந்தால் அதுவே எனக்குப் போதும். எனக்குச் சம்ஸ்கிருத மொழி தெரியாமல் போனால் என்ன? பண்டிதன் பாமரன் எவராக இருந்தாலும், உள்ள முருகிப் பகவானை வேண்டுவார்களானால் பகவானு டைய குழந்தைகளாகிய அவர்கள் ஒவ்வொருவர் மீதும் அவர் கருணை மழையைப் பொழிகிறார். ஒரு வருக்கு ஐந்து குழந்தைகள் இருக்கின்றன. சில 'அப்பா!' என்று அழைக்கின்றன; சில முழுமையாக உச்சரிக்க முடியாமல் 'அப்' என்று அரைகுறையாக உச்சரித்து அழைக்கின்றன. தன்னைச் சரியாகக் கூப்பிடவில்லை என்பதற்காகத் தகப்பன் இளங் குழந்தைகளிடம் குறைவான அன்பு காட்டுவானா? அவை சிறு குழந்தைகள்; ஆகையால் சரிவர அவற்றால் பேச முடியாது என்று அவனுக்கு நன்கு தெரியும். எனவே, எல்லாக் குழந்தைகளிடமும் ஒரே மாதிரியாகவே அவன் அன்பு செலுத்துகிறான்.''

மேலே குறிப்பிட்டவை அனைத்தும் ஆன்மிக முன்னேற்றத்தை அடிப்படையாகக் கொண்ட தூய பக்திக்கு மட்டுமே பொருந்தும். மற்றப்படி, செய்யும் வழிபாடு காமிய நோக்கம் கொண்டதாக இருந்தால், சம்பிரதாயங்கள் விதித்திருக்கும் விதி முறைகள் அனைத்தையும் தவறாமல் பின்பற்றத்தான் வேண்டும்; அவ்விதம் பின்பற்றினால்தான் விரும்பும் காமியப் பலன் கிடைக்கும். ✱

# மகாபாரதத்தில் சில நீதிகள்

வழிப்போக்கன்

நூறு கிணறுகள் வெட்டுவதை விட ஒரே ஒரு குளம் வெட்டுவது சிறந்தது. நூறு குளங்கள் வெட்டுவதைவிட ஒரு யாகம் செய்வது சிறந்தது. நூறு யாகங்கள் செய்வதைவிட ஓர் உத்தம மகனைப் பெறுவது சிறந்தது. நூறு உத்தம புத்திரர்களைப் பெறுவதைவிட வாய்மையைக் கடைப்பிடிப்பது சிறந்தது.

ஒரு தராசில், ஆயிரம் அச்வமேத யாகங்களின் புண்ணியத்தை ஒரு தட்டிலும், உண்மையைச் சொல்பவனுக்குக் கிடைக்கும் புண்ணியத்தை மற்றத் தட்டிலும் வைத்தால், உண்மையைச் சொல்பவனின் புண்ணியம் வைக்கப்பட்டுள்ள தட்டுத்தான் கீழே சாயும்.

விஷய (லௌகிக உலக) ஆசை அதை அனுபவிப்பதனால் குறைவதில்லை. தீயில் நெய்யை ஊற்றியதும் அது எப்படி மேன்மேலும் கொழுந்து விட்டு எரிகிறதோ அது போலவே அனுபவிக்க அனுபவிக்க ஆசை அதிகரிக்கத்தான் செய்யும்.

அறிவாளிகள் எட்டாத பொருளுக்கு ஆசைப்படுவதில்லை. கையை விட்டுப் போன விஷயங்களைப்பற்றி வருத்தப்படுவதில்லை.

எவர் காரியங்களை எண்ணித் துணிகிறார்களோ, காலத்தை வீணாக்குவதில்லையோ, மனதைத் தம் வசம் கட்டுப்படுத்தி வைத்திருக்கிறார்களோ அவர்களே அறிவாளிகளாவர்.

கல்வியின்றிக் கர்வம் கொள்பவர், வறுமையில் வாடிக்கொண்டிருந்தும் மனக்கோட்டைகள் கட்டுபவர்கள், வேலை செய்யாமலே பணம் சம்பாதிக்க விரும்புகிறவர்கள்—இவர்களை மூடர்கள் என்றுதான் அறிஞர் கூறுவர்.

தங்களிடம் குற்றம் இருந்தும் பிறரிடம் குற்றம் கண்டுபிடிப்பவர்களும், தாங்கள் சாமர்த்தியமில்லாதவர்களாக இருந்தும் பிறர் மீது கோபம் கொள்கிறவர்களும் மகாமூடர்கள்.

தம்மைவிடப் பலசாலிகளுடன் விரோதம் கொண்டுள்ளவர்களுக்கும், எல்லாப் பொருள்களையும் இழந்தவர்களுக்கும், காம ஆசை கொண்டவர்களுக்கும், திருடர்களுக்கும் இரவில் தூக்கம் வராது.

நியாய வழியில் சம்பாதித்த பொருளை இரண்டு வழிகளில் துஷ்பிரயோகம் செய்யலாம்—தகுதியுள்ளவர்களுக்குக் கொடுக்காமல் இருத்தல், தகுதியற்றவர்களுக்குக் கொடுத்தல்.

வல்லமை பெற்றிருந்தும் கோபம் கொள்ளாதவர்களும், வறியவர்களாக இருந்தும் தானம் செய்பவர்களும் சுவர்க்கத்திற்கும் மேலான பதவியை அடைவார்கள்.

தன் குடும்பத்தைச் சேர்ந்த வயது வந்தவர்கள், நல்ல குடும்பத்தில் பிறந்து இப்பொழுது கஷ்டநிலையில் இருப்பவர்கள், பொருளற்ற நண்பர்கள், மக்கட்பேறு இல்லாத சகோதரி ஆகியோரை மனிதன் என்றும் காப்பாற்ற வேண்டும்.

பொறுமைசாலிகளை மற்றவர் சாமர்த்தியமற்றவர்கள் என்று நினைத்துக்கொள்ளலாம். ஆனால் அதைப் பொறுமைசாலி பொருட்படுத்தக்கூடாது. சாமர்த்தியமற்றவர்களுக்குப் பொறுமை குணமாக இருக்கலாம். ஆனால் சாமர்த்தியசாலிகளுக்கோ அது ஓர் அழகிய ஆபரணமாகும்.

# வேதாந்தச் சிந்தனை

வி. ஆர். கணேசன்

பிருகதாரண்யக உபநிஷதத்தில் யாஜ்ஞவல்கியர் பின்வருமாறு கூறுகிறார்:—

''நேஹ நாநாஸ்தி கிஞ்சந—இங்கே பல வகையாகப் பிரித்துச் சொல்வதற்கு ஒன்றுமில்லை.''

ஜகத்திலுள்ள பொருள்களுக்கெல்லாம் ஆதாரமாக ஒரே வஸ்துதான் இருக்கிறது. உடலினுள் இருக்கும் இந்த ஆதாரவஸ்துவும் வெளிப் பொருள்களிலுள்ள ஆதாரவஸ்துவும் ஒன்றேதான். அதுதான் அத்வைதம், பிறப்பற்றது, நித்தியமானது, மாறுதலற்றது, அழிவற்றது என்ற உண்மையைத்தான் உபநிஷதங்கள் விளக்குகின்றன என்று கௌடபாதர் தமது காரிகையில் எடுத்துக் காட்டுகிறார்—

''சிலர் பிரம்மத்தைப்பற்றிப் பேசும்பொழுது ஒரே பிரம்மம்தான் பல வாறுகப் பிறக்கிறது என்று சொல்கிறார்கள். ஆனால் இயற்கையாகவே பிறப்பற்ற ஆத்மா (பரம்பொருள்) அழிவுள்ளதாக எப்படி மாற முடியும்?'' (காரிகை 3-20)

''இயற்கையின் தன்மையை ஒருபொழுதும் மாற்ற முடியாது.'' (3-21)

சுருதியில் கூறியது போல், 'ஆத்மா நித்தியம் (மூன்று காலத்தையும் கடந்தது)' என்று ஆகும்பொழுது, பிறப்பின்மைதானே அதன் இயல்பு?

ஒரு பொருளும் தனது இயற்கையான தன்மையை மாற்றிக்கொள்ள முடியாது. நீரைச் சூடாக்கலாம்; மறுபடியும் குளிர்ந்த நீராகவும் மாற்ற முடியும். ஆனால் நெருப்பின் சுடும் தன்மையை மாற்ற முடியுமா?

கரி கறுப்பு நிறமுள்ளது. பலவிதமாக முயன்றாலும் அதன் கறுப்பு நிறத்தை மாற்ற முடியாது அல்லவா?

அது போலவேதான் அழிவில்லாத வஸ்துவை அழிவுள்ளதாகவும், அழிவுள்ள வஸ்துவை அழிவில்லாததாகவும் மாற்ற முடியாது. அது இயற்கைக்கு விரோதமானது.

ஆனால், சுருதிகளிலிருந்து சில வாக்கியங்களை எடுத்துச் சுட்டிக் காட்டும் பொழுது, ஒரு பெரிய சந்தேகம் எழக் கூடும். சுருதிகளில் பகவத் சிருஷ்டியைப் பற்றியும், சகுண உபாசனைகளைப்பற்றியும் கூறியிருக்கிறதே. அதனால் துவைத பாவனையும் சுருதிகளில் இடம் பெறுகிறதே. ஜகத் எல்லாம் மித்யா என்று சுருதிப் பிரமாணத்தை எவ்விதம் எடுத்துக்கொள்வது?

ஸ்ரீ கௌடபாதர் இதற்கும் விளக்கம் கூறுகிறார்—

சாதன சதுஷ்டயம் என்ற நான்கு விதச் சாதனைகளிலும் தகுதியைப் பெற்றுத் தூய உள்ளத்துடன், சிரவண மனன நிதித்யாஸனத்தில் ஈடுபட்டு, ஆத்ம விசாரம் செய்யும் சாதகனுக்கு உத்தம அதிகாரி என்று பெயர். அத்தகையவர்களுக்கு, சகுண உபாசனையோடு மட்டும் நின்றுவிட்டால் ஆத்மஞானம் வராது; துரிய நிலையில் விழித்தெழுதல் அவசியம் என்று கௌடபாதர் உபதேசிக்கிறார்.

அந்த நிலையில் இந்த ஆத்மாவும் பரம்பொருளும் ஒன்றேதான், ஜகத்தில் காணும் தோற்றங்களெல்லாம் மித்யா என்ற ஞானம் புலப்படும். அப்படித் தேர்ச்சி பெருதவர்களுக்கு இந்தப் பாதையில் முன்னேறுவதற்குப் பக்தி, சகுண உபாசனை எல்லாம் அவசியமான படிகளாகும் என்கிறார் கௌடபாதர்.

மேலும், சுருதிகளில் சொன்ன இரண்டு தத்துவங்களுக்கும் ஒரு விரோதமும் இல்லை. ஏனெனில், வ்யாவஹாரிக ஸத்யம் என்ற நடப்பு முறையில் நோக்கும்பொழுது, விழிப்புநிலையில் காணும் ஜகத்திலுள்ள தோற்றங்களெல்லாம்




உண்மை போலவேதான் தோன்றும். உண்டாகும் அனுபவங்களும் தாற்காலிக உண்மைதான் என்றும் எடுத்துக்கொள்ள வேண்டும்.

ஆனால் துரிய நிலையை அறிந்த ஞானிக்கோ, பாரமார்த்திக ஸத்யம் என்ற பேருண்மையைப் பார்க்கும் முறையில் பரம்பொருளின் மெய்யுணர்வு வந்தவுடன், பரம்பொருள் ஒன்றுதான் உண்மை, மற்ற எல்லாம் உண்மையலல, அவை மாயையால் தூண்டப்பட்ட தோற்றம் என்ற அறிவு கிடைக்கப் பெறும்.

இரண்டு தோற்றங்களும் வெவ்வேறு உணர்வுப் படிகளிலிருந்து பார்க்கும் பொழுது, இரண்டும் உண்மை என்றே தோன்றும். ஆகையால் இரண்டிற்கும் ஒரு முரண்பாடும் இல்லை. ஆனால் ஒன்றினால் (துவைத பாவனையால்) இன்ப துன்பங்கள், பிறப்பு இறப்பு முதலியவற்றை அனுபவிக்க நேரிடும். மற்றொரு நிலையில் (அத்வைதத்தை அறிந்த நிலையில்) ஒரே, தூய மெய்யுணர்வாகிய ஆனந்தம் தான் நிலைத்திருக்கும்.

கௌடபாதர் பரம் மெய்ப்பொருளின் தத்துவத்தைச் சொல்வதோடு விட்டு விடாமல், ஒரு சாதகனுக்கு இந்தச் சாதனையில் எந்த எந்த விதமான இடையூறுகள் நேரக்கூடும், அவற்றை எவ்வாறு கடந்து துரிய நிலையை அறியக்கூடும் என்ற மார்க்கத்தையும் கூறியுள்ளார். அதை இப்போது சுருக்கமாகக் கவனிப் போம்.

துவைத திருஷ்டி உண்டாவதற்கும் மனம்தான் காரணம்.

கனவுநிலையில் மனதில் உண்டாகும் கொந்தளிப்பினால் கனவு உலகத்தைச் சிருஷ்டி செய்து கனவு காண்பவன் அந்தக் கனவு உலகப் பொருள்களுடன் இணைந்துகொண்டு அனுபவிக்கிறான்.

அது போலவே விழித்திருப்பவனின் மனமும் மாயையின் மயக்கத்தால் உண்டாகிய கொந்தளிப்பினால் பரம் பொருளைப் பல பொருள்களாலான வெளி உலகமாகக் கண்டு, கூடி விளையாடுகிறான்.

மனதைச் சரியான வழியில் செலுத்தி, அதில் உண்டாகும் பலவிதமான எண்ணங்களையும் நினைவுகளையும் அமைதி நிலைக்குக் கொண்டு வருவதுதான் (மனோ நிக்ரஹம்—மனதை ஒடுக்குதல்) முக்கிய மான படி என்கிறார் கௌடபாதர்.

பலபொருள் - உலகம் மறைந்து உண்மை ஞானம் உண்டாகும் நிலையை அடைவதற்கு ஆன்மிக வாழ்க்கையில் விடாமுயற்சியும், தொடர்ந்த அப்பியாசமும் அவசியம்.

வெளிப் பொருள்களிலிருந்து மனதை உள்முகமாகச் செலுத்தி உடல் புலன்கள் மனம் புத்தியுடன் உள்ள இணைப்பைத் துண்டித்துவிடுவதுதான் 'அஸ்பர்ச யோகம்' என்று சொல்லப்படும் நிலைமை. அதாவது இதைச் 'சேர்க்கையற்ற மனம் உண்டாகுதல்' என்று சொல்லலாம். 'துக்கத்தின் சேர்க்கையிலிருந்து பிரித்துக்கொள்ளும் யோகம்' (கீதை 6-23) என்று பகவத்கீதை கூறுவதையும் எடுத்துக்கொள்ளலாம்.

ஒரு சாதகன் துக்கத்திற்குக் காரண மான 'அஹம் வ்ருத்தி, இதம் வ்ருத்தி, மம வ்ருத்தி - இந்த உடல்தான் நான், இவை என்னைச் சார்ந்தவை, இது என்னுடையது' என்ற உணர்ச்சிகளையெல்லாம் ஒவ்வொன்றாக விட்டுவிடப் பழக வேண்டும். இந்த நிலையில் மனம் நாம ரூப பாவனையைத் தள்ளிவிட்டு, 'பரம்பொருள்தான் ஜகத்திலுள்ள எல்லா வஸ்துக்களுக்கும் ஆதாரம்' என்பதை அறிகிறது.

அது அதுவேயாகி இருப்பதனுல், அறிபவன், அறியப்படும் பொருள் என்னும் வித்தியாசமும் நசித்துவிடுகிறது. இந்த அமைதியான மனநிலையை 'அமனீபாவம்—மனம் இல்லாத நிலை' என்றும் கூறுவார்கள்.

ஸ்ரீகௌடபாதர், இந்த மார்க்கத்தில் முயற்சி செய்யும் சாதகனுக்கு நான்கு விதமான தடங்கல்கள் உண்டாகக்கூடும் என்று சுட்டிக் காட்டுகிருர். அவை வருமாறு—1. லயம் (உறக்கம்), 2. விக்ஷேபம் (மனக் கொந்தளிப்பினுல் துவைத பாவனை), 3. கஷாயம் (உள்மனதில் படிந்திருக்கும் விருப்பங்களினுல் மனம் கெட்டியாகுதல்), 4. ரஸாஸ்வாதம் (ஆனந்த அனுபவத்தை அறிந்து மீண்டும் விரும்புதல்).

மனம் சிறிது அமைதி நிலையை அடையும்போது உறக்கம் வந்துவிடும். உறக்கம் வரும் சமயத்திலேயே மனதை எழுப்பி மறுபடியும் உஷார் நிலைக்குக் கொண்டுவர வேண்டும். சமாதிநிலையும் உறக்கமும் ஒன்றுதான் என்று நினைத்து விடக்கூடாது.

இரண்டாவதான விக்ஷேபம் என்ற நிலையில் மனம் திரிய ஆரம்பித்து, வெளிப் பொருள்களில் விருப்பம் குறையாமல் அதனுல் உண்டாகும் இன்பங்களை மீண்டும் விரும்பி, இன்பம் தரும் பொருள்களையே நாடித் துன்பங்களுக்கு உள்ளாகிறது. சாதகன் இவ்விதம் மனம் திரியும்போது, அதைத் திரும்ப உள்ளே இழுத்துக் கொள்ள வேண்டும். வைராக்கிய பாவனையாலும், 'பிரம்மம் அத்வைதம்' என்ற உண்மையைத் தியானிப்பதனுலும், அறிந்து பற்றை மெல்ல மெல்லத் துண்டிக்க வேண்டும்.

மூன்ருவது தடங்கலான கஷாயம் என்பது, ராக, துவேஷ, மோகத்தாலான, அனுபவங்களின் பல நாள் சேர்க்கையினுல் உள்மனதில் ஆழ்ந்து பதிந்து அமைந்திருக்கும் விருப்பங்கள் மீண்டும் முளைக்க ஆரம்பிக்கும் நிலை. பசை போல் ஒட்டிக்கொண்டிருக்கும் இந்தப் பாவனைகளை ஜயிப்பது சுலபமல்ல. இவை இந்த ஜன்மத்தின் கர்மபலன்களால் மட்டும் உண்டாகும் வாசனைகள் என்று சொல்ல முடியாது. பல ஜன்மங்களின் கர்மபலன்களாகவும் இருக்கக்கூடும். இவற்றைக் கடக்க இரண்டு வழிகளைக் காட்டுகிருர் ஸ்ரீகௌடபாதர். ஒன்று - துக்க ஸ்மரணம் அதாவது துக்க சம்பவங்களை மேலே கொண்டு வந்து, ஆராய்ந்து, விவேகத்தினுல் வெளியே தள்ளிவிடுதல். இரண்டாவது வழி - ஞானுப்பியாசம். திரும்பத் திரும்ப, விடாமல் பிரம்மத்தின் அத்வைதமாகிய உண்மையைப்பற்றித் தியானம் செய்தல்.

நான்காவது தடங்கலான ரஸாஸ்வாதம் என்பது ஆத்ம சாதனையின் கடைசிக் கட்டத்தில் ஏற்படுகிறது. சாதகன் இதைப்பற்றி எச்சரிக்கையாக இருக்கவேண்டும். அமைதி வந்த நிலையில் உண்டாகும் ஆனந்த அனுபவம் இன்பத்தையும் கொடுக்கும். அந்த அனுபவம் காரணமாக சமாதிநிலையை அடைந்து விட்டோம் என்று நினைத்துச் சாதகன் ஏமாந்துவிடக் கூடாது. ஆனந்தநிலை மனுேபுத்தியால் அறியப்படுமேயானுல் அதுதான் பரிபூரண ஆனந்தம் என்று எண்ணுமல், முயற்சியைத் தொடர்ந்து செய்துகொண்டிருக்க வேண்டும். அது பஞ்சகோசத்தில் பிரதிபிம்பித்திருக்கும் உணர்ச்சியேதான் என்று அறிந்து, மீண்டும் முயற்சியில் ஈடுபட்டு, தொடர்ந்து முயற்சி செய்ய வேண்டும்.

அப்படிப்பட்ட மனம் அமைதிநிலையை அடைந்து, எண்ணங்களாலும் நினைவுகளாலும் பாதிக்கப்படாமல் இருக்கும் சமயத்தில், 'ஆத்ம ஸத்யானுபோதம்—



கடவுள் திருநாமத்தை நெஞ்சில் ஒரு விநாடி நினைத்தாலும் போதும். அது அறுபத்தெட்டுப் புண்ணிய க்ஷேத்திரங்களுக்கும் யாத்திரை சென்று வருவதற்குச் சமமாகும்.

—கபீர்தாசர்

## பண்டாரப் பாட்டு...!

ஒரு சமயம் ஐப்பசி மாதத்தில் மகாவித்வான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை மாயவரத்தில் இருந்தார். அவர் விடியற்காலையில் காவிரி புராணம் படித்துக்கொண்டிருந்தார். அவருடன் சில புலவர்களும் இருந்தனர்.

தெருவில் யாரோ ஒரு பண்டாரம் பாட்டுப் பாடிக்கொண்டு போவது காதில் விழுந்தது. அந்தப் பாட்டின் பொருள் அங்கு யாருக்கும் விளங்கவில்லை. எனவே நாளை அந்தப் பண்டாரத்திடமே கேட்டுவிடுவது என்று முடிவு செய்தார்கள்.

மறுநாள் காலை பண்டாரம் அதே பாட்டைப் பாடிக்கொண்டு சென்றான்.

மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் பண்டாரத்தைப் பார்த்து, ''திரும்பவும் அந்தப் பாட்டைப் பாடு'' என்றார்.

**அத்தினத்துக்கும் ஒட்டடைகைக்கும் ஆயிரம் காதம்**
**ஆனாலும் நடக்குது சேலை வியாபாரம்**

என்று பண்டாரம் பாடினான்.

''இதற்கு என்ன அர்த்தம்?'' என்று பிள்ளை அவர்கள் கேட்டார்கள்.

''அர்த்தம் இருக்குது சாமி. அத்தினம்—அஸ்தினாபுரம். ஒட்டடைகை—துவாரகை. (ஓட்டை-துவார+கை).

''அஸ்தினாபுரத்திற்கும் துவாரகைக்கும் அதிக தூரம். அஸ்தினாபுரத்தில் திரௌபதியைத் துகில் உரித்தபோது ஸ்ரீகிருஷ்ண பரமாத்மா தினுசு, தினுசாகச் சேலைச் கொடுத்து மானத்தைக் காத்தார் என்று இந்தப் பாட்டு சொல்லுது'' என்றான் பண்டாரம்.

அவன் சொன்ன விளக்கத்தைக் கேட்டுப் பிள்ளையவர்கள் அசந்தே போய்விட்டார்.

பாமரத் தமிழிலுள்ள இவ்வளவு பெரிய கருத்து நம்மையும் அயர வைக்கிறது அல்லவா?

—நீடாமங்கலம் கிருஷ்ணமூர்த்தி பாகவதர் நிகழ்த்திய சொற்பொழிவிலிருந்து கேட்டு எழுதியவர்: வி.குக. சண்முகமணி

அதுவே பிரம்மம்—ஸத்யம்' என்ற அறிவினால் சாந்தமடையும்.

அப்பொழுது—

**ஸ்வஸ்தம் சாந்தம் ஸநிர்வாணமகத்யம்**
**ஸுகமுத்தமம்**
**அஜமஜேந ஜ்ஞேயேந ஸர்வஜ்ஞம்**
**பரிசக்ஷதே ॥ (3-47)**

''உத்தமமான ஆனந்தம் தன்னுள்ளேயே ஆத்மா-பரமாத்மாவின் ஐக்கியத்தை உணர்வதனாலே உண்டாகிறது. இந்த அமைதிநிலை முத்தியடைந்தவன் போலவும், விவரிக்க முடியாததாகவும், எப்பொழுது உண்டாயிற்று என்று சொல்ல இயலாததாகவும் இருக்கும். இதுதான் பரம மெய்ப்பொருளாகிய தூய ஞானம்.''

இந்த அஸ்பர்ச யோகநிலைதான் உண்மையான நிர்விகல்ப சமாதிநிலை. இதேதான் மோட்சம் என்றும் சொல்லப்படுகிறது. இதை அறிந்தவன் ஜீவன் முக்தனாகிறான்.

